படிப்படியாக உயர்ந்து

முன்னேற்றமடைந்த அவருக்குத் தெரியும்...

**...அழகான ஆடைகளும் அதற்கு உதவின என்று !**




நிச்சயமாக, மபத்லால் க்ரூப் அளிப்பவை நேர்த்தியான துணிமணிகள்தான் !

AIYARS-M. 458 TM



பத்மவிபூஷண்

# எம் எஸ் சுப்புலக்ஷ்மி

ரமோன் மக்ஸேஸே விருது பெற்றவர்



# கல்விக்கு அஞ்சலி



பாரதீய வித்யா பவனத்தின் கௌரவ அங்கத்தினரான எம் எஸ் சுப்புலட்சுமி தமது புதிய எச் எம் வி இசைத்தட்டை (ECSC 3259) பவனத்திற்கு சமர்பணம் செய்கிறார்... அவர் கல்விக்கு அளிக்கும் அஞ்சலி.

எம் எஸ் பாடியுள்ள இத்தொகுப்பில் பத்து மொழிகளில் பக்திப்பாடல்கள் உள்ளன.

பஜரே யது நாதம் சம்ஸ்கிருதம்
ஹரி மை தோ ஹிந்தி
நாராயணா நம குஜராத்தி
பதிதோ தாரிணி கங்கே வங்காளி
கண்டு கண்டு மலையாளம்
இஷராதே கத்ரா உருது
ஹரி போல ஹரி போல மராத்தி
யது வம்ஸா யது வம்ஸா கன்னடம்
வாஸு தேவா வாஸு தேவா தெலுங்கு
நெஞ்சுக்கு நீதி நெஞ்சுக்கு நீதி தமிழ்







GC. 1028.

தி கிராமபோன் கம்பெனி ஆஃப் இந்தியா.

# கல்கி

ராக்ஷஸ ஆடி 18
ஆகஸ்டு 3, 1975


''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.














## ஸ்ரீ விஷ்ணு துர்காம்பிகை ஜீர்ணோத்தாரண கைங்கர்யம்



தஞ்சை ஜில்லா நாரசிங்கம் பேட்டை ரயில்வே ஸ்டேஷனுக்கு வடகிழக்கில் சுமார் 1½ மைல் தூரத்தில் கும்பகோணம்—காவேரிப் பட்டிணம் ரஸ்தாவில் உள்ள மஹாராஜபுரத்தில், துர்வாஸ மஹரிஷியால் பிரதிஷ்டை செய்யப்பட்டுப் பக்தர்களின் இஷ்ட சித்திகளை அருளி வரும் **ஸ்ரீ விஷ்ணு துர்காம்பிகையின் ஆலயம்** (சோழ மன்னர்களால் கட்டப்பட்டது) இப்பொழுது புனருத்தாரணம் செய்யப்பட்டு வருகிறது. இதற்கும் அன்றாட பூஜை நைவேத்தியத்துக்கும் போதிய நிதி வசதி வைக்கவும் ரூ. 20,000த்துக்கு மேல் தேவைப்படுகிறது.

நன்கொடை அனுப்பிவைக்க விரும்புவோர் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்புமாறு கோரப்படுகிறார்கள். ''ஸ்ரீ G. ராமச்சந்திரன், பொக்கிஷதார், திருப்பணிக் கமிட்டி, பாஸ்கரராஜபுரம், வழி மாயூரம் *R. M. S. Pin Code 609810* தஞ்சை ஜில்லா.''

*1.
ஃப்ளோரைடு. வாயில் உண்டாகும் அமிலங்களால் பல் எனாமல் கரைவதைக் குறைக்கிறது.

*2.
ஃப்ளோரைடு. பற்சிதைவைத் தோற்றுவிக்கும் 'ஆஸிட் என்ஸைம்'களைத் தீவிரமாகத் தடுக்கிறது.

*3.
ஃப்ளோரைடு. வளரும் பற்கள் சிதைவுற்று சொத்தை விழாமல் பாதுகாக்கிறது.

*4.
ஃப்ளோரைடு. இளைய பற்களைப் பளிங்குபோல் கெட்டிப் படுத்துகிறது.

# புதிய
# கோலினஸ் ஃப்ளோரைடு
# வாழ்நாள்
# முழுதும் பற்களுக்கு உறுதுணை!

கோலினஸ் ஃப்ளோரைடால் பற்களுக்குப் பூரண பாதுகாப்பு

கோலினஸ் ஃப்ளோரைடு பற்பசையில் கலந்துள்ள ஸோடியம்-மோனோ-ஃப்ளோரோ-ஃபாஸ்பேட் (எஸ்எம்எஃப்பி) வளரும் பற்கள் சிதைவுற்று சொத்தை விழாமலிருக்க அதிகப் பாதுகாப்பு அளிக்கிறது. ஏனெனில், எஸ்எம்எஃப்பி பல் எனாமலுடன் இணைந்து, பற்களைக் கெட்டிப் படுத்தி, பற்சிதைவு ஏற்படாமல் தீவிரமாக எதிர்க்கிறது.

கோலினஸ் ஃப்ளோரைடு பெரியவர்களுக்கும் கூடப் பயனுள்ளது.

கோலினஸ் ஃப்ளோரைடில் கலந்துள்ள எஸ்எம்எஃப்பி பல் எனாமலைத் தாக்கிப் பற்சிதைவைத் தோற்றுவிக்கும் 'பாக்டீரியா என்ஸைம்'களைத் தீவிரமாகத் தடுக்கவும் செய்கிறது.

எந்த சாதாரண பற்பசையும் சக்தி வாய்ந்த இத்தகைய அன்றாட பற்பராமரிப்பை உங்கள் குடும்பத்தாரின் பற்களுக்குத் தரமுடியாது. ஆனால் குளுமையான நறுமணச் சுவையுள்ள கோலினஸ் ஃப்ளோரைடு மட்டுமே இதைத் தருகிறது.

*1. 'ஃப்ளோரைடு அண்ட் ஹ்யூமன் ஹெல்த்', ஒர்ல்ட் ஹெல்த் ஆர்கனிஸேஷன், ஜெனிவா, 1970, பக்கம் 203-206.
*2. அதே சஞ்சிகை-பக்கம் 206-210.
*3. அதே சஞ்சிகை-பக்கம் 305-308.
*4. அதே சஞ்சிகை-பக்கம் 205.




**கோலினஸ் ஃப்ளோரைடை மிஞ்சுவது பல் வைத்தியர் அளிக்கும் பராமரிப்பு மட்டுமே.**

KF-1-74-1A

Regd. User of TM; Geoffrey Manners & Co., Ltd.

# கலைஞர் கவனத்துக்கு...

நெருக்கடி நிலைப் பிரகடனத்துக்குப் பிறகு தி.மு.க. தவிர மற்ற எதிர்க்கட்சியினர் பிரமித்து, மனச் சோர்வடைந்துவிட்டதாகக் காண்கிறது. தலைமை, தொண்டர்களுடன் தொடர்பு கொள்ள முடியாதது காரணமாயிருக்கலாம். ஆனால் இதற்காகத் தளர்வடைவது சரியா? இரண்டாவது அணி எங்கே? அதுவும் இல்லையெனில் மூன்றாவது அணி என்ன ஆயிற்று? கேட்கவே தோன்றுகிறது.


கல்கி

மலர் 35

இதழ் 1






ஆட்சியை எதிர்த்து, ஆள்வோரை ஏசி அதன் மூலம் மக்கள் கவனத்தைக் கவர்வது அல்ல ஜனநாயகம். மாற்றுத் திட்டத்தைச் சமர்ப்பித்து மக்களைத் தம் பக்கம் திருப்புவது கஷ்டம். இந்தக் கஷ்டமான பணியையே சுதந்திராக் கட்சிக்குக் கொடுத்தார் ராஜாஜி. ஜனநாயகம் பற்றியும் பிரஜா உரிமைகள் குறித்தும் பொருளாதார ஸ்திரத் தன்மை பற்றியும் மக்களுக்குப் போதிக்கும் கல்விப் பணி ஆற்றுங்கள் என்றார். ஜனநாயகத்தில் மக்களுக்குள்ள கடமைகளையும் எடுத்துக் கூறுமாறு பணித்தார். இன்று சுதந்திரா என்ன, மற்ற எல்லா எதிர்க்கட்சிகளுமே இத்தகைய ஆக்க பூர்வமான திட்டங்களை வகுத்துக் கொண்டு செயல்பட வேண்டிய நிலையில் உள்ளன. சிரம சாத்தியமான காரியம் என்றாலும் மனப்பூர்வமாக உழைத்தால் மக்கள் மனங்களை வெல்லலாம்.

மத்தியிலிருக்கும் ஆட்சிக்கு எதிரான ஒரு கட்சியின் ஆட்சிக்குத் தலைமை தாங்கும் கலைஞர் மேற்சொன்னவற்றைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். திருநெல்வேலியில் தி.மு.க. மகாநாடு கூடப் போகிறது. அப்போது வழக்கம்போல் தி.மு.க.வின் சாதனைகளைப் பட்டியல் போட்டு மாநில சுயாட்சி கோஷமும் எழுப்பினால் போதுமா? அதை விடப் பெரிய பணி காத்திருக்கிறது கலைஞருக்கு. சோர்வுற்றிருக்கும் எதிர்க்கட்சிகளின் இரண்டாவது அல்லது மூன்றாவது அணியினரை உசுப்பிவிடுவதாகும் அந்தப் பணி. முதல்வர் பொறுப்பேற்று ஜனநாயகப் பற்றுள்ள எதிர்க்கட்சிகளின் மகாநாடு ஒன்று கூட்டலாம். இன்றைய நிலவரத்துக்கு ஏற்றாற்போல் ஒரு கூட்டுச் செயல் திட்டத்தை வகுத்துக் கொள்ளலாம்.

புரட்சி—இயக்கம் என்றெல்லாம் பேசாமல், மாணவர்களைத் தூண்டிவிடாமல், ராணுவத்தையும் போலீஸையும் சந்திக்கு இழுக்காமல் சாத்துவீகமான, அமைதியான முறையில் ஜனநாயகப் பணியாற்றலாம்.

அகில இந்திய அரங்கில் முன்னெப்போதையும்விட இன்று முக்கியத்துவம் பெற்றுள்ள கலைஞருக்கு அதற்கேற்றாற்போல் நாடு தழுவிய நோக்கு வேண்டும்.

'நெருக்கடி நிலைப் பிரகடனத்தினால் பயனேதுமில்லை என்ற நிலைமை உருவாகுமாறு எதிர்க்கட்சிகள் நடந்து கொள்ளட்டும்' என்கிறார் ஜகஜீவன்ராம்.

இதை ஏன் ஒரு சவாலாக எடுத்துக் கொள்ளக் கூடாது?


மக்கள் தேர்ந்தெடுத்த அரசை எப்படி-யாவது கவிழ்க்க வேண்டும் என்று எண்ணுவது தவறு.

என்னாங்க அப்படி சொல்லிட்-டீங்களே


# அன்பார்ந்த நேயர்களுக்கு... ....



சென்ற இதழில் கல்கிப் பத்திரிகையின் விலை உயர்வு பற்றிய அறிவிப்பு நேயர்கள் பலருக்கு அதிர்ச்சியாக இல்லாவிட்டாலும் வருத்தத்தை அளித்திருக்கும். விலையை உயர்த்த வேண்டியிருப்பதால் எங்களுக்கு ஏற்படும் வருத்தத்தைவிட நேயர்களின் வருத்தம் நிச்சயம் அதிகமாயிராது. விலையேற்றத்தில் உள்ள நியாயத்தைச் சிறிதளவேனும் எடுத்துக் கூற விரும்புகிறோம். எங்களுடைய சிரமங்களையெல்லாம் அடுக்கி உங்களைத் தொந்தரவு செய்ய விரும்பவில்லை. குறிப்பாக இரண்டு அம்சங்களை விளக்குகிறோம்.

பத்திரி[illegible]றையில் உள்ள சிரமங்களை அறிய மத்திய அரசு ''உண்மைகளை அறியும் கமிட்டி'' ஒன்று நியமித்தது. இந்தக் கமிட்டி ஓர் உண்மையையும் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை என்று ''இந்தியன் பிரஸ்'' இதழில் திரு பி. கே. ராய் தலையங்கம் எழுதியுள்ளார். திரு பி. கே. ராய் இந்திய நாளிதழ்கள் சங்கத்தின் தலைவர்.

உண்மைகளை அறியும் கமிட்டி பத்திரிகைத் தயாரிப்புக்கான தாளின் விலையைப் பக்கத்துக்கு ஒரு பைசா என்று நிர்ணயித்துவிட்டது. ஆனால் அது டன் ரூ. 1500க்குப் பத்திரிகைத் தாள் கிடைத்தபோது இருந்த நிலை. இன்றோ டன் ரூ. 4200 வரை விற்கிறது. இதே போல் மேற்படி கமிட்டி பத்திரிகை மையின் விலை 1.9 பைசா என்று நிர்ணயித்துவிட்டது. ஆனால் இதற்குப் பிறகு மையின் விலை முந்நூறு சதவீதம் அதிகரித்திருக்கிறது.

இவ்வளவுதான், இதற்கு அதிகமாக ஏதும் கூறி உங்களையும் எங்களோடு சேர்ந்து துக்கப்படச் சொல்லவில்லை. மாறாக விலை உயர்ந்தாலும் பத்திரிகையில் படித்துப் பயன்பெறவும் மகிழவும் புதிய புதிய அம்சங்கள் வந்து கொண்டிருக்கின்றன என்ற அளவில் சந்தோஷப்படுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

இந்தப் புதிய அம்சங்கள் பற்றிச் சென்ற இதழில் அறிவிப்புக்களைப் பார்த்தீர்கள். இந்த இதழில் அவற்றைப் படித்து எடை போடவும் செய்வீர்கள். கல்கி ஜனரஞ்சகமாக அமையும்போதே தரக் குறைவாக ஆகிவிடாமலும் சிரித்து மகிழ விஷயங்களைத் தரும்போதே பயன்பெறக் கருத்துக்களைக் கொடுப்பதாகவும் இருக்கும். இது போக இன்னொரு ரகசியத்தையும் கல்கியின் முப்பத்தைந்தாவது பிறந்த நாளில் சொல்லிவிடுகிறோம்.

கல்கியின் கடைசிப் பக்கத்தை நேயர்களைப் பொறுத்தவரை முதல் பக்கமாக மாற்றி வருகிற திரு கண்ணதாசனை அண்மையில் நேரில் சந்தித்து கல்கி வாசகர்களை ஒரு சரித்திரக் கதை எழுதி மகிழ்விக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டோம்.

அவர் உடனே அதற்கு முழு மனத்துடன் ஒப்புதல் அளித்ததுடன் திட்டமிடவும் ஆரம்பித்துவிட்டார். கதையின் சரித்திர நிலைக்களன் என்ன என்பதைச் சில தினங்களுக்கு முன் அவர் டெலிபோனில் விவரித்தபோதே மெய்சிலிர்த்தது. சரித்திரமே சிலிர்க்கச் செய்ததென்றால் சரித்திரக் கதை நம்மை என்னதான் செய்யாது!

— ஆசிரியர்

## என்ன சேதி?

### அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 1975

மேற்படி போட்டிக்கு மொத்தம் 2792 கதைகள் வந்தன. முடிவு தேதிக்குப் பின்னர் வந்த கதைகளைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளவில்லை. இந்தக் கதைகளை ஆசிரியர் குழாத்திலுள்ள அறுவர் பங்கு பிரித்துக் கொண்டு முதல் பரிசீலனை செய்தோம். 138 கதைகள் இரண்டாவது பரிசீலனைக்கென கல்கி ஆசிரியரிடம் ஒப்படைக்கப்பட்டன. இவற்றைப் படித்து விவாதத்துக்கென்று 58 கதைகளை ஆசிரியர் தேர்ந்தெடுத்தார்.

ஜூலை மாதம் 21, 22 தேதிகளில் கல்கி ஆசிரியர் குழாம் கூடி மேற்படி 58 கதைகளை விவாதித்து அவற்றிலிருந்து பிரசுரத்துக்குரியன என்று 27 கதைகளைத் தேர்ந்தெடுத்தது. இந்த 27 கதைகளை மேலும் அலசி முதல், இரண்டாவது, மூன்றாவது பரிசுக்குரிய கதைகள் தேர்ந்தெடுக்கப்பட்டன.

பரிசு பெற்ற கதாசிரியர்கள் குறித்த விவரங்களை இவ்விதழில் வேறொரு பக்கத்தில் காணலாம். பரிசு பெற்றவர்களுக்குக் கல்கி நேயர்களின் சார்பில் இதயபூர்வமான நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம். பங்கு பெற்றவர்களுக்கும் நல்வாழ்த்துக்கள்!

அமரர் கல்கியின் பெயரால் நடக்கும் இந்தப் போட்டியில் அறிமுக எழுத்தாளர்கள் சிலரது கதைகளும் பிரசுரத்துக்கு ஏற்கப்பட்டுள்ளன என்பது மகிழ்ச்சிக்குரிய செய்தி. அவர்களுக்குக் கல்கி அன்பர்களின் விசேஷப் பாராட்டுக்கள் உரியன.

### திரு கோதண்ட ராவ்

திரு பி. கோதண்ட ராவ் அவர்கள் தமது 86வது வயதில் காலமானார் என்ற செய்தி பெரும் துயரம் தருவதாகும். எண்பத்தாறு வயதில் ஒருவர் காலமானால் — அதாவது முழு வாழ்க்கை நடத்திக் காலமானால் - அதில் துயரப்படுவதற்கு என்ன இருக்கிறது என்று கேட்கலாம். அவரைப் போன்றவர்களின் எண்ணிக்கை நாட்டில் குறைந்து வருகிறதே! பாரத நாட்டு மக்களின் நலனையே சதா சர்வகாலமும் சிந்தித்துத் தமது குரலை எவ்விதப் பிரதி பிரயோஜனமும் கருதாமல் எழுப்பி வந்த உத்தமர் திரு பி. கோதண்ட ராவ். இந்தியை ஆட்சி மொழியாகத் திணிக்க முற்பட்டபோது

பெரும் குரலை எழுப்பி, தென்னாட்டு மக்களின் — ஹிந்தி பேசாத மக்களின் — உரிமைகளுக்காக அவர் 'கோதண்டம்' ஏந்திப் போராடிய விஷயம் தமிழ் நாட்டில் யாரும் அதற்குள் மறந்திருக்க மாட்டார்கள்.

பெங்களூர் கல்லூரியில் தாவர இயல் பேராசிரியராக வாழ்க்கையைத் தொடங்கிய கோதண்டராவ் அவர்கள், ஆறு ஆண்டுகள் அப்பணி புரிந்து விட்டு ஸர்வண்ட்ஸ் ஆப் இந்தியா சொஸைட்டியில் சேர்ந்து பணியாற்றினார். காந்தி மகானின் பேரன்புக்குப் பாத்திரமானார். மகாகனம் சீனிவாச சாஸ்திரியாரைத் தமது குருவாக ஏற்றுக் கொண்டு பொதுப் பணி புரிந்தார். குருநாதரின் வாழ்க்கை சரிதத்தை அரிய ஆங்கிலத்தில் எழுதி அறிஞர்களின் பாராட்டுக்களைப் பெற்றார். அவரது மனைவியார் அமெரிக்க மாதரசி-மேரி அவருக்கு நமது அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

## அணு அரக்கன்

அணுகுண்டுகள் வெடிக்கும்போது பரவும் கதிரியக்கத்தினால் சூழல் நச்சு மயமாவதைக் குறித்து ராஜாஜி எவ்வளவோ எழுதினார். கடலிலோ ஆகாயத்திலோ பூமி மட்டத்திலோ அதற்குக் கீழோ எங்கு வெடித்தாலும் சரி நமது பூமண்டலத்தில் அந்த அளவுக்குக் கூடுதலாகவோ குறைவாகவோ கொடிய நச்சு பரவுகிறது. இந்த நச்சு இன்றுள்ளவர்களைப் பாதிப்பதைவிட எதிர்காலப் பிரஜைகளை அதிகம் பாதிக்கிறது. எதிர்காலப் பிரஜைகள் பலர் அங்கஹீனர்களாகப் பிறப்பதற்கு இந்த அணுக் கதிரியக்கம் காரணமாகிறது.

கதிரியக்கத்தினால் உணவுப் பொருள்களை நீண்ட நாட்கள் கெடாமல் பாதுகாக்கலாம் என்று விஞ்ஞானிகள் சோதனைகள் நடத்தினார்கள். நமது மத்திய அரசு இந்தச் சோதனைகளுக்காகக் கோடிக்கணக்கான ரூபாய்களைச் செலவிட்டிருக்கிறது. பல ஆண்டுச் சோதனைகளுக்குப் பிறகு கண்ட முடிவு : கதிரியக்கத்தினால் உணவுப் பொருள்கள் கெடாமல் காக்க முடியும் ; ஆனால் இதை உண்பவர்களுடைய சந்ததிகள் பாதிக்கப்பட மாட்டார்கள் என்று உறுதியாகக் கூறுவதற்கில்லை ! அவர்கள் அங்கஹீனர்களாகப் பிறப்பதற்குச் சாத்தியக் கூறுகள் உண்டு !

இப்படி ஒரு விஷப் பரீட்சை நடத்துவானேன் ? விஷமத்தனமான முடிவுக்கு வருவானேன் ? நடந்து முடிந்தது எப்படியோ போகட்டும். இனியேனும் ஸ்ரீமான் அணு சக்தியிடம் எச்சரிக்கையாக இருப்போம். அளவோடு பயன்படுத்தினால் அவன் அடிமை. அளவுக்கு மீறினால் அவன் அரக்கன்.

## ஜேபியார் கைது !

மீசா சட்டத்தின் கீழ் தென் சென்னை அ.தி.மு.க. அமைப்பாளர் திரு ஜேபியார் கைது செய்யப்பட்டிருக்கிறார், கள்ளச் சாராய வியாபாரத்தில் ஈடுபட்டதற்காக !

அ.தி.மு.க. அமைந்தபோதே அதன் தலைவர் மது அரக்கன், லஞ்ச ஊழல் பேய் ஆகியவற்றுக்கு எதிராகப் போராடப் போவதாக அறிவித்தார். மதுவிலக்குக்காகப் போராட வேண்டிய அவசியம் இன்று இல்லாததால் திரு ஜேபியார் மது வியாபாரத்தில் இறங்கினார் போலும் !

தொண்டர்கள் செய்யும் தகாத காரியங்கள் தலைவர்களுக்கு எப்படித் தலைகுனிவை ஏற்படுத்தி வருகிறது பாருங்கள் !

தலைவர்களின் தூய்மை தொண்டர்களிடம் ஒப்புயர்வற்ற ஒழுக்கத்தை வளர்த்த காலம் ஒன்று இந்தியாவில் இருந்தது என்பதை நம்புவதே கடினமாகி விட்டது !

## இளவரசுக்கு வாழ்த்து

"தமிழ் முரசு" பத்திரிகையில் துணை ஆசிரியராகப் பணியாற்றி வந்த திரு கு. அருணகிரிநாதன், மதுரை ஆதீனம், திருஞான சம்பந்தர் மடாலயத்தின் இளவரசராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்.

முப்பது வயது இளைஞரான திரு அருணகிரிநாதன் ஆங்கிலத்திலும், தமிழிலும் பேச்சாற்றலும், எழுத்தாற்றலும் மிக்கவர்.

அத்துடன், எல்லோரிடமும் மனம் விட்டுப் பழகும் பண்பும், எதிலும் ஒரு துடிதுடிப்பும், நற்சிந்தனையும் சமயம், இலக்கியம், தத்துவம் ஆகிய துறைகளில் ஆழ்ந்த ஈடுபாடும் கொண்டவர். விடுதலைப் போராட்ட வீரர் திரு ஆர். எம். குமாரசாமிப் பிள்ளையின் ஒரே புதல்வர்.

திரு அருணகிரிநாதனுக்கு இப்போது இருக்கும் மதுரை ஆதீனம் 291வது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஸ்ரீ ஞான சம்பந்த தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் நிர்வாண தீட்சையும் ஆச்சாரிய அபிஷேகமும் செய்வித்து, இளவரசுப் பட்டமளிப்பு விழாவைச் சிறப்புற நடத்தி வைத்தார்கள்.

ராஜாஜி சிந்தனை

### வாழ்க்கை நெறி !

சுதந்திரமாக இயங்க வேண்டும் என்ற தர்ம நியாயமான கோரிக்கை சமூக நீதிக்குரிய சில கடமைகளையும் சுமந்து கொண்டிருக்கிறது. ஒவ்வொரு தனிமனிதனுடைய உள் மனத்திலும் மனச்சாட்சியிலும் இந்தக் கடமைகள் பதிய வேண்டும். கடவுள் கிருபையால் தன் பங்குக்குக் கிடைத்த லாபங்களுக்கு ஒரு தர்மகர்த்தாவாகத் தன்னை ஒவ்வொரு மனிதனும் கருதிக் கொள்ள வேண்டும். தன்னைச் சுற்றி உள்ளவர்களுக்கு அவன் தர்மகர்த்தாவாக விளங்கி அதற்குரிய கடமைகளை நிறைவேற்றும் போது அவன் ஆன்மிக மகிழ்ச்சியை அடைகிறான். எனவே, இது ஒரு வாழ்க்கை முறை. சகலத்திலும் அரசாங்கக் கட்டுப்பாடு என்பது அடிமை மார்க்கம் எனில் தர்மகர்த்தாக் கொள்கைப்படி நடப்பது சுதந்திர வாழ்க்கைப் பாதை. ஈசோபநிஷத் கூறும் வாழ்க்கை நெறி இது. மகிழ்ச்சிக்குரிய வழியும் இதுவே.

—சுயராஜ்யா, ஜூலை 27, 1963

# முருகப் பெருமான் 21

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

ஸனத்குமாரருக்குத் தாம் பார்வதியை நீக்கிப் பரமேசுவரனுக்கு மட்டும் பிள்ளையாகப் பிறப்பதாகச் சொன்னதிலும் ஒரு நியாயம் தெரிந்தது. அவருக்கு எவரிடமும் நிர்ப்பயம்தான். அதனால் அந்த நியாயத்தை வெளிப்படையாகவே சொன்னார்.

''கேட்காதவருக்கு ஒன்றைத் தரக் கூடாது என்று சாஸ்திரம். அந்த நியாயப்படி நீதான் என்னிடம் நியாயம் கேட்டாயே தவிர, பார்வதி கேட்கவில்லை. ஆகவே, உனக்கு மட்டுமே பிள்ளையாகப் பிறப்பேன். நீ மட்டுமாக என்னை எப்படி உற்பவிக்கச் செய்வாயோ, அப்படிச் செய்து கொள்'' என்று ஸ்வாமியிடம் சொன்னார்.

இதைக் கேட்டதும் அம்பாளுக்கு ரொம்ப ஏமாற்றமாக, பரம துக்கமாக ஆகிவிட்டது. லோகத்திலுள்ள சமஸ்த ஜீவராசிகளும் அவள் குழந்தைகள்தாம் என்றாலும், இது அந்த ஞானாம்பாளுக்கே தெரியும் என்றாலும், இப்படிப்பட்ட ஒரு பிரம்ம ஞானி மறுபடியும் பிறக்கிற போது அவன் நேராகத் தனக்குப் பிள்ளையாகப் பிறக்க வேண்டும் என்று அவளுக்கும் ஆசையிருந்தது.

இவர் சாஸ்திரத்திலிருந்து நியாயம் காட்டினமாதிரி அவளும் காட்டித் தர்க்கம் பண்ணினாள். ''சாஸ்திரங்களில் பதியையும் பத்தினியையும் ஒன்றாகத்தான் சொல்லியிருக்கிறது. பதி பிரார்த்திப்பதெல்லாம் பத்தினியையும் உத்தேசித்துத்தான். ஆனதால் நான் தனியாக வரம் கேட்க வேண்டும் என்றில்லை. அவர் கேட்டதாலேயே நீ எனக்கும் புத்திரனாக வரத்தான் வேண்டும்'' என்று 'ரைட்' கேட்டாள்.

ஸனத்குமாரர் யோசித்தார். ''அம்மா, நீ சொல்வது நியாயம்தான். இருந்தாலும் நான் ஈசுவரனிடமிருந்து மட்டும் உற்பவிப்பது இன்னொரு விதத்தில் எனக்குத் திருப்தி தருவதாக இருக்கிறது. எல்லாம் பிரம்மம் என்று எனக்குத் தெரிந்தாலும், அதற்கே நீங்கள் இரண்டு பேரும் எனக்கு இத்தனை 'டைட்டில்' கொடுத்தாலும், ஒரு விஷயத்தில் எனக்குப் பக்குவம் வரவில்லை. அதாவது, ஸ்திரீ புருஷ சம்பந்தத்தில் நாம் பிறப்பதாவது, கர்ப்பவாசம் செய்து யோனிமுகமாக ஜனிப்பதாவது என்று இன்னமும் எனக்கு அருவருப்பாகத்தான் இருக்கிறது. பிரம்ம ஞானிக்கு இப்படி இருக்கக் கூடாதுதான். ஆனால் ஏனோ இருக்கிறதே. அதனால் இதைச் சொல்கிறேன். ஆகையால், நீ பெரிய மனசு பண்ணி உன் பதி மட்டுமே என்னை ஜனிக்கச் செய்வதற்கு அநுமதி தர வேண்டும்'' என்றார்.

ஆனால் அம்பாளுக்கு மனசு வரவில்லை.

யோசித்துப் பார்த்துக் கடைசியில் ஒரு 'ராஜி'க்கு — 'காம்ப்ரமைஸு'க்கு' — வந்தார்கள்.

ஆதியில் பரமேசுவரன் பஸ்மாசுரனுக்கு வரம் தந்திருந்தார். வர பலத்தால், அவன் யார் தலையில் கை வைத்தாலும் அவர் பஸ்மமாகிவிடுவார். வரம் பலிக்கிறதா என்று பரமேசுவரனிடமே பரீட்சை பார்க்க வந்தான் அசுரன். உடனே அவர் அந்தர்தானமாகிவிட்டார்.

அந்தச் சமயத்தில் அம்பாள் ஏதோ லீலா நிமித்தம் தன்னுடைய ஸர்வக்ஞத்வத்தை மறைத்துக் கொண்டு சாதாரண ஸ்திரீ மாதிரி இருந்தாள். எனவே, திடீரென்று பரமேசுவரனின் சரீரம் மறைந்ததைப் பார்த்ததும் அவளுக்குப் 'பகீர்' என்றது. பதிவிரதா ரத்தினமான அவளால் ஈசுவரனின் பிரிவைத் தாங்க முடியவில்லை. அப்போதே அப்படியே உருகிவிட்டாள். யதார்த்தத்திலேயே அவளுடைய சரீரம் உருகி ஒரு ஜலாசயமாக (நீர்நிலையாக) ஆகிவிட்டது. அதுதான் சரவணப் பொய்கை.

பிறகு பஸ்மாசுரன் மறைந்து, ஸ்வாமி சரீரத்துடன் வந்ததும், அம்பாளும் தன் திவ்விய தேகத்தை எடுத்துக் கொண்டாள். இருந்தாலும் அவளுடைய பதிவிரதா தர்மத்துக்கும் பிரேமைக்கும் அடையாளமாக, சரவணப் பொய்கையையும் அழியாமலிருக்கும்படியாக அநுக்கிரகித்தாள். சரவணம் சாட்சாத் இவள் சரீரம்தான். அது இப்போது நினைவுக்கு வந்தது.

அதனால், ஸனத்குமாரர் அடுத்த ஜன்மாவில் பரமேசுவர தேஜஸாக ஜனித்துவிடுவதென்றும், பிறகு அதை அம்பாள் சரவணம் என்ற தன் சரீரத்தில் தாங்கி சுப்ரமண்ய ஸ்வரூபமாக்கித் தருவதென்றும் முடிவுசெய்து கொண்டார்கள்.

இதன்படியே பிற்பாடு ஈசுவரன் தன் நெற்றிக் கண்களிலிருந்து பொறிகளை வெளியிட்டார். ஸனத்குமாரர்தான் இப்படி ஆவிர்பவித்தவர். அந்தத் தேஜஸின் உக்கிரத்தை எவராலும் தாங்க முடியவில்லை, முதலில் கங்கை தாங்கப் பார்த்தாள். முடியவில்லை. அப்போது பிரம்மா அவளிடம், ''இதைக் கொண்டு போய் சரவணத்தில் சேர்த்துவிடு'' என்றார். ''ஆனைப்பட்ட என்னாலேயே தாங்க முடியாத உக்ர ஜ்வாலையை அந்தச் சின்ன பொய்கை எப்படித் தாங்கும்?'' என்று கங்கை அவரைக் கேட்க, அவர், ''சரவணம் என்பது சாட்சாத் பராசக்தியின் சரீரமாகும். அது ஒன்றாலேயே ஈசுவர தேஜஸைத் தாங்க முடியும்'' என்றார்.

இதன்படியே கங்கை செய்ய, சரவணபவனாக முருகன் அவதரித்தான். பிறகு, ஸனத்குமாரர் கண்ட சொப்பனப்படி தேவர்களுக்கெல்லாம் சேநாதிபதியாகி, அசுரர்களை சமூலம் இருந்த இடம் தெரியாமல் சம்ஹாரம் செய்து சர்வலோகங்களையும் ரட்சித்தான் இந்த சரவணபவன். அவருக்கு எத்தனை பெயர்கள் இருந்தாலும் இதுவே ஷடக்ஷரீ, ஆறெழுத்து என்று மகாமந்திரமாக இருக்கிறது. சரவணமாக இருக்கும் அம்பாளின் மகிமை! (தொடரும்)

**1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள் கட்டுரைகளிலிருந்து தொகுத்தது.**

# திருவள்ளுவரும் நம்மாழ்வாரும்



(நாட்டின் அரசியல் பொருளாதாரப் போக்கு கண்டு தாம் பெற்ற துன்பத்தைப் பிறருடன் கட்டுரைகள் மூலம் பகிர்ந்து கொண்டு பரிகாரமும் கூறி வந்த ராஜாஜி, அதேசமயம் தாம் படித்த தமிழ், ஆங்கில, சமஸ்கிருத இலக்கியங்களால் பெற்ற இன்பத்தையும் இவ்வையகம் பெற எழுதினார்.* அவ்விதம் ஆனந்தத்தைப் பகிர்ந்துகொள்ள எழுதிய ஒரு கட்டுரை நவம்பர் 8, 1942 "வசந்தம்" இதழில் பிரசுரமாயிற்று. ராஜாஜியின் ஆசிகளுடன் 35-ம் ஆண்டில் அடியெடுத்து வைக்கும் கல்கியின் இந்தச் சிறப்பிதழில் மேற்படி கட்டுரையை மீண்டும் பிரசுரித்து மகிழ்கிறோம்.

— ஆசிரியர்)

திருவள்ளுவ நாயனாருடைய கொள்கைகளைத் திருக்குறளிலிருந்து ஆராய்ந்தறியக் கூடும். ஆனால் அவர் எச்சமயத்தவர் என்பதைத் திட்டமாகச் சொல்ல முடியாது. அவர் சமண மதத்தைச் சேர்ந்தவர் என்று கற்றோர் சொல்வதுண்டு. உண்மையில் இதற்கும் அதிக ஆதரவு கிடையாது. திரும்பத் திரும்பச் சொல்லியேதான் இந்தக் கோட்பாட்டுக்கு ஓரளவு வலு ஏற்பட்டிருக்கிறது. வள்ளுவர் எச்சமயத்தினராயினும் அச்சமயக் கொள்கைகளை அவர் நூலில் புகுத்தவில்லை என்பது மட்டும் உறுதி. வெகுநாட்களுக்கு முந்தியே இதைப் புலவர்கள் கண்டு புகழ்ந்திருக்கின்றனர்.

"எப்பாலவரும் இயைபவே வள்ளுவனார்
முப்பால் மொழிந்த மொழி"

என்று கல்லாடர் பாடினார்.

இந்தக் கட்டுரையில் நம்மாழ்வார் பாடிய திருவாய் மொழிப் பாசுரங்களில் காணும் சில மொழிகளையும் திருக்குறள் கடவுள் வாழ்த்தில் காணும் சில மொழிகளையும் எடுத்துக் காட்டி இரண்டுக்கும் உள்ள ஒப்புமையைப் பற்றி எழுதுவதின் நோக்கம் வள்ளுவரும் என்னைப் போல் வைஷ்ணவர் என்று முடிவு செய்வதற்கல்ல! திருவள்ளுவர் எழுதி இருக்கும் மொழிகள் வைஷ்ணவத்துக்கும் எவ்வளவு இலகுவாகப் பயன்படலாயிற்று என்று காட்டவேதான் இதை எழுதப் புகுந்தேன். எச்சமயத்தவரும் இவ்விதமே பயன்படுத்தக் கூடும்.

"கணக்கறு நலத்தனன்
அந்தமில் ஆதியம் பகவன்"

என்று நம்மாழ்வார் பாடிய கம்பீர மொழிகளைப் படிக்கும்போது வள்ளுவனாரின் முதல் குறளிலுள்ள "ஆதி பகவன்" என்ற தொடர்மொழி நினைவுக்கு வராமல் இருக்க முடியாது.

"மனனக மலமற மலர்மிசை
எழுதரு மனனுணர் வளவிலன்"

என்று ஆழ்வார் ஆரம்பத்தில் பாடும்போது,

"மலர் மிசை ஏகினான்"

என்று வள்ளுவனார் பாடியதும் நினைவுக்கு வருகிறது.

"கொள்கை கொளாமை இலாதான்"

என்று ஆழ்வார் பாடுகிறார்.

"வேண்டுதல் வேண்டாமை இலான்"

என்பது திருவள்ளுவர் பாட்டு. ஒன்று மற்றொன்றின் எதிரொலி போலவே தொனிக்கிறது.



சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

"அறவாழி அந்தணன் தாள் சேர்ந்தார்க்கு"

என்று வள்ளுவனார் எட்டாவது குறளைப் படிக்கும்போது,

"அறவனை ஆழிப் படை அந்தணனை"

என்ற நம்மாழ்வாரின் தேன்மொழிபோலவே இருக்கிறது.

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர்"

என்ற திருவள்ளுவர் மொழிகளுக்கும்,

"புனைவன் பிறவிக் கடல் நீந்துவார்க்கே"

என்று ஆழ்வார் பாடிய பாசுரத்துக்கும் உள்ள ஒப்புமையையும் ஆராய்க.

இன்னும் திருக்குறள் கடவுள் வாழ்த்துப் பாட்டுக்களில் உள்ள "இறைவன்" "தனக்குவமை இல்லாதான்" என்ற பதங்களுக்குப் பிரதி ஒலியாக நம்மாழ்வார் திருவாய்மொழியில், "தன் ஒப்பாரில்லப்பன்." "திருத்தாய் என் உள்ளத்திறைவன்" என்றும் காணலாம்.

இரு புலவர்களின் மனப்பான்மையும், தேடும் பொருளும் ஒன்றேயாதலின் மொழிகளும் ஒரேவிதமாக இயைவது இயல்பேயாயினும் தொடர் மொழிகளும் செய்யுளோசையும் ஒன்றாயிருப்பது அதில் அடங்காது.

நம்மாழ்வார் வள்ளுவனாரின் திருக்குறளை நன்கு அனுபவித்தவர் என்பதில் ஐயமே இல்லை. இதுவெல்லாம் புலவர்களுக்குத் தெரிந்த பழைய விஷயங்கள். ஆயினும் நான் இப்போது சிறு குழந்தை போல் நூல்களைப் படித்துக் கொண்டு வருகிறேன். நான் அடைந்த மகிழ்ச்சியைப் பிறருக்குச் சொல்லவே எழுதுகிறேன்.





கீதா தன் அன்பு
வாடிக்கையாளர்களை
இன்முகத்துடன்
வரவேற்கிறது!
கீதாவின் மகத்தான சலுகை விற்பனையில்
கலந்து கொண்டு லாபத்தில் பங்கு கொள்ளுங்கள்.
எண்ணற்ற இதயம் கவரும் எழிலூட்டும் வண்ணப்பட்டு
ஜவுளி ரகங்களுக்கும், ரெடிமேட் ஆடைகளுக்கும்.
கீதா வழங்கும் விலைச்சலுகை விபரம் பாருங்கள்.
பட்டுப் பிரிவு ரூ. 20 முதல் 100 வரையான
விலை குறைப்பு
பட்டு தவிர அனைத்து ஜவுளி ரகங்களுக்கு
10% சலுகை உண்டு
தள்ளுபடிக் கவுண்டர் 30% முதல் 50%
வரை தள்ளுபடி உண்டு
ரெடிமேட் ஆடைகள் 15% சலுகை உண்டு
குறிப்பு: பின்னி மற்றும் பாம்பே டையிங் மில் ஜவுளி ரகங்
களுக்கு சலுகை வழங்க இயலாமைக்கு வருந்துகிறோம்.
உங்கள் விருப்பம்போல்
தேர்ந்தெடுக்க உங்கள்
கீதாவுக்கு விஜயம்
செய்யுங்கள்.
கீதா
சில்க் & சாரி பஜார்
31-32, N. S. B. ரோடு, திருச்சி-620002
CROWN 88

# வறண்ட ஏரி நிரம்புமா? இருண்ட சூழல் விலகுமா?

திருவான்மியூரிலிருந்து சென்னை நகருக்குக் குடிநீர் கொணர்ந்து விநியோகிப்பதில், குழாயில் 'லீக்கேஜ்' ஏற்பட்டதாகவும் அந்தச் சிக்கல் காரணமாகக் குடிநீர் வருவது தடைப்பட்டதாகவும், நாளிதழ்களில் செய்திகள் வெளியாயின. இதுபற்றிக் குடிநீர் வாரிய 'எஞ்சினியரைக் கேட்டதற்கு, ''அதெல்லாம் பழுது பார்க்கப்பட்டு விட்டதே? பல நாட்களுக்கு முன்பே கவனித்துச் சீர்ப்படுத்தியாயிற்றே?'' என்கிறார்.

நகராட்சி மன்ற விசேஷ அதிகாரி திரு டி. வி. அந்தோனியிடம் விவரம் கேட்டதும் அவர் கூறுகிறார்: ''சென்னை நகருக்கு இப்போது ஒரு நாள் விட்டு ஒரு நாள் குடி நீர் வழங்குகிறோம். இதற்கு ஒரு நாளையத் தேவை முப்பது மிலியன் காலன். இதில் ஒரு மிலியன் காலன் மட்டுமே திருவான்மியூரிலிருந்து வருகிறது. திருவான்மியூர் நீரைக் கார்ப்பரேஷன் குழாய்களில்தான் கொண்டு செலுத்துகிறார்கள். தென்சென்னையில் அடையாறு, சைதாப்பேட்டை ஆகிய இடங்களுக்கு மட்டுந்தான் திருவான்மியூர் தண்ணீர் வழங்கப்பெறுகிறது. மற்ற இடங்களுக்குப் புழலேரி நீர்தான் வழங்கப் பெறுகிறது.''

''இப்போது புழலேரியின் நிலைமை என்ன?'' என்று கேட்டதும் அவர் ஒரு புகைப்படத்தை எடுத்துக் கொடுக்கிறார். பிரசுரிக்கப்பட்டுள்ள படம் அவர் கொடுத்ததுதான்.

''ஏரியில் நீரையே காணோமே?''

திரு அந்தோனி தரும் விளக்கம்: ''ஏரியில் அங்கங்கே சில இடங்களில் குட்டைகளாக நீர் தேங்கியுள்ளது. அதுவும் பூமிக்கு ஐந்து அடி கீழே (Five feet below sill) உள்ளது. இந்த நீரைக் கீழேயிருந்து ஐந்து அடி மேல் மட்டத்தில் உள்ள கால்வாய்களுக்குச் செலுத்த மின் பம்புகளை உபயோகிக்க வேண்டியுள்ளது. புழலேரிப் பகுதியில் மழை யில்லை. எப்படியும் இந்த ஜூலை மாதம் முடிய ஒரு நாள் விட்டு ஒரு நாள் நீர் வழங்கும் முறை நீடிக்கும்.''

''அப்புறம் ?''

''மழை பெய்தால் நிலைமையைச் சமாளித்து விடலாம். *மாத இறுதிக்குள் மழை பெய்யா விட்டால் ஆகஸ்ட் முதல் தேதிக்குப் பிறகு மூன்று நாட்களுக்கு ஒரு முறைதான் நீர் வழங்க இயலும். மழை பெய்யாமல் வானம் பொய்த்து விட்டாலும், எப்படியும் அக்டோபர் வரை இந்த மூன்று நாட்களுக்கொரு முறை நீர் வழங்குவது தடைப்படாது'' என்று நம்பிக்கை தெரிவிக்கிறார்.

நகரின் குடி நீர்ப் பிரச்னையைச் சமாளிக்க விசேஷ அதிகாரி செய்துள்ள விசேஷ ஏற்பாடுகள்:

| | |
|---|---|
| கிணறுகளுக்குப் பொருத்தப்பட்டவை உட்பட மொத்தம் இயங்கும் பம்புகள் | — 9500 |
| நகரில் தோண்டப் பெற்றுள்ள கிணறுகள் | — 755 |
| புதிதாக வெட்டப்பட்டு வரும் கிணறுகள் | — 89 |
| அங்கங்கே பல்வேறு தெருக்களில் வைக்கப்பட்டுள்ள டாங்குகள் | — 1083 |
| நீர் வழங்கப் பயன்படுத்தப்பெறும் லாரிகள் | — 98 |

— ஆர். பி.

இது ஜூலை 15உ. பேட்டி. இதன்பின் இயற்கை, செயற்கை மழைகள் இறைவன் அருளால் சென்னைக்குக் கிடைத்து வருகின்றன.



# சிவகாமியின் சபதம்

அமரர் கல்கி

## இருபத்தைந்தாம் அத்தியாயம்

## மகேந்திரர் சொன்னார்!

சிவகாமி விம்மி ஓய்வதற்குச் சிறிது நேரம் கொடுத்து விட்டுக் குண்டோதரன், ''தாயே! தென் தமிழ்நாட்டில் 'ஆக்கப் பொறுத்தவருக்கு ஆறப் பொறுக்கவில்லையா?' என்று ஒரு பழமொழி உண்டு. தாங்களும் ஒருவேளை கேள்விப்பட்டிருப்பீர்கள். இத்தனை நாட்கள் பொறுத்திருந்தவர்கள், காரியசித்தி அடையப்போகும் சமயத்தில் பொறுமை இழக்கலாமா?'' என்றான்.

''குண்டோதரா! எனக்கா நீ பொறுமை உபதேசம் செய்கிறாய்? ஒன்பது வருஷ காலம் பகைவர்களின் நகரில் நிர்க்கதியாய் நிராதரவாய் உயிரை வைத்துக் கொண்டிருந்தவளுக்கா பொறுமையை உபதேசிக்கிறாய்?'' என்று சிவகாமி தாங்காத மனக் கொதிப்புடன் கேட்டாள்.

''தாயே! தங்களுக்குப் பொறுமையை உபதேசிக்கவில்லை. என்னுடைய சக்தியின்மையைத்தான் அவ்விதம் வெளியிட்டேன். இராமாயணக் கதையின் இன்னொரு கட்டத்தைத் தங்களுக்கு ஞாபகப்படுத்த விரும்புகிறேன். அசோக வனத்தில் சீதையைக் கண்ட அனுமார், பிராட்டியைத் தன்னுடன் புறப்பட்டு வந்துவிடும்படி கோரினார். இராமனிடம் பத்திரமாய்க் கொண்டு போய்ச் சேர்த்துவிடுவதாகச் சொன்னார். ஆனால், சீதாதேவி, அனுமாருடன் வரு



வதற்கு மறுத்துவிட்டார்....!'' என்ருன் குண்டோதரன்.

''குண்டோதரா ! சிதாதேவியின் உபமானத்தை எதற்காகச் சொல்கிருய் ! நான் சிதாதேவி அல்ல ; மிதிலையை ஆண்ட ஜனக மகாராஜாவின் புத்திரி அல்ல. ஏழைச் சிற்பியின் மகள்......''

''அம்மா! நானும் அனுமார் அல்ல. உருவத்தில் ஏதோ அந்த இராம தூதனை ஒத்திருக்கிறேன் ! ஆனல், அவருடைய சக்தியிலே லட்சத்தில் ஒரு பங்குகூட எனக்குக் கிடையாது. இந்த வாதாபி நகரத்தைத் தனியாகக் கொளுத்தி எரித்துவிட்டுத் தங்களை அழைத்துப் போகும் சக்தி எனக்கு இல்லையே! என் செய்வேன்?''

''ஆ! மறுபடியும் என் பாழும் சபதத்தைக் குறிப்பிடுகிருய். அதைத்தான் நான் கைவிட்டுவிட்டேன் என்று சொன்னேனே? என்னை உன்னேடு அழைத்துப் போகும்படிதானே சொல்கிறேன்.''

''அம்மா! இதே வீட்டில் இதே இடத்தில் நின்று, மாமல்லர் தம்முடன் வந்துவிடும்படி தங்களை வருந்தி வருந்தி அழைத்தார். தாங்கள் பிடிவாதமாக மறுத்து விட்டீர்கள். 'என் சபதத்தை நிறைவேற்றிவிட்டு என்னை அழைத்துப் போங்கள்' என்றீர்கள். அதையெல்லாம் நான் பார்த்துக் கொண்டும் கேட்டுக் கொண்டும் இருந்தேன். இப்போது மாமல்லர் சபதத்தை நிறைவேற்றுவதற்கு ஆயத்தமாய்ப் புறப்பட்டுக் கொண்டிருக்கிருர். 'அம்மா! நாளை விஜயதசமி அன்று கிளம்புவதற்கு நாள் பார்த்திருக்கிறது. எல்லாம் உத்தேசப்படி நடந்தால் சரியாக இன்னும் ஒரு மாதத்துக்குள் வாதாபிக் கோட்டையைப் பல்லவ சைனியம் சூழ்ந்து முற்றுகையிடும். தங்கள் கண் முன்னல் தங்களுடைய சபதம் நிறைவேறுவதைப் பார்ப்பீர்கள். அதைரியத்துக்கு இடம் கொடாமல் இன்னும் சிறிது காலம் பொறுமையாயிருங்கள்.''

'' குண்டோதரா ! நான் சொல்வதை நீ புரிந்துகொள்ளவில்லை. என் மனத்தையும் நன்ருய் அறிந்து கொள்ளவில்லை. அதைரியத்தினலோ அல்லது



பொறுமை இழந்தோ நான் பேசவில்லை. எனக்காக இன்னொரு பயங்கர யுத்தம் நடப்பதைத் தடுக்க விரும்புகிறேன். என் வாழ்க்கையில் நான் அனுபவித்ததெல்லாம் போதாதா? அந்தச் சமயம் ஏதோ ஆத்திரமாய் இருந்தது; அதனால் அப்படிச் சபதம் செய்துவிட்டேன். இப்போது நினைத்துப் பார்த்தால் அது மூடத்தனம் என்று தோன்றுகிறது. யுத்தம் என்றால் என்னென்ன பயங்கரங்கள் நடக்கும்? எத்தனை பேர் சாவார்கள்? எத்தனை குற்றமற்ற ஜனங்கள் கஷ்டங்களுக்கு உள்ளாவார்கள்? வெற்றி தோல்வியைப் பற்றித்தான் நிச்சயம் என்ன சொல்ல முடியும்? இந்தத் துரதிர்ஷ்டக்காரியின் மூடப் பிடிவாதத்துக்காக அம்மாதிரிக் கஷ்டங்கள் ஏற்படுவதை நான் விரும்பவில்லை. அதனாலேதான் என்னை உன்னோடு அழைத்துப் போகச் சொல்லுகிறேன்!'' என்றாள் சிவகாமி.

இதற்கு என்ன மறுமொழி சொல்வது என்று தெரியாமல் குண்டோதரன் திகைத்து நின்றான். சிறிது நேரம் யோசித்து, ''அம்மா! இனிமேல் தங்களுடைய சபதத்தைத் தாங்கள் மாற்றிக் கொண்ட போதிலும் மாமல்லர் வாதாபிப் படையெடுப்பைக் கைவிட முடியாது. மகேந்திர பல்லவர் மரணத் தறுவாயில் மாமல்லருக்கு இட்ட கட்டளையை அவர் நிறைவேற்றியே தீருவார்!'' என்றதும், சிவகாமி, ''ஆ! மகேந்திரர் என்ன கட்டளையிட்டார்?'' என்றாள்.

''ஆயனச் சிற்பியின் மகள் செய்த சபதத்தை எப்படியாவது நிறைவேற்றியே தீர வேண்டும் என்று கட்டளையிட்டார்! வாதாபியைச் கட்டு எரித்துச்



சிவகாமி அம்மையைக் கொண்டு வந்தால்தான் பல்லவ குலத்துக்கு நேர்ந்த அவமானம் தீரும் என்று வற்புறுத்திக் கூறினர். அதற்காக இடைவிடாத பிரயத்தனம் செய்யும்படி மாமல்லரையும் மந்திரிமார்களையும் கேட்டுக் கொண்டார் !'' என்று குண்டோதரன் கூறியதும், ''ஆகா! சக்கரவர்த்திக்கு என் பேரில் அவ்வளவு கருணை இருந்ததா ? அவரைப் பற்றி என்னவெல்லாம் நான் தவறாக எண்ணினேன் ?'' என்று கூறிச் சிவகாமி மறுபடியும் கலகலவென்று கண்ணீர் விட்டாள்.

பிறகு மகேந்திர பல்லவரின் மரணத்தைப் பற்றியும் இன்னும் காஞ்சியில் சென்ற ஒன்பது வருஷமாக நடந்த சம்பவங்களைப் பற்றியும் விவரமாகச் சொல்லும்படி கேட்டாள்.



குண்டோதரன் எல்லாச் சம்பவங்களையும் பற்றிக் கூறினன். ஆனல், ஒரு சம்பவத்தைப் பற்றி மட்டும் அவன் பிரஸ்தாபிக்கவே இல்லை. அதைச் சொல்ல அவனுக்குத் துணிச்சல் ஏற்படவில்லை.

* * *

குண்டோதரன் விடைபெற்றுக் கிளம்ப வேண்டிய சமயம் வந்தபோது, சிவகாமி ஏக்கம் நிறைந்த குரலில், ''அப்பனே ! மாமல்லர் நிச்சயம் வருவாரா ? அல்லது எனக்கு வீண் ஆசை காட்டுகிறாயா?'' என்று கேட்டாள்.

'' நிச்சயமாக வருவார், அம்மா ! பல்லவ குலத்தின் கௌரவத்தைக் காப்பாற்றுவதற்காக அவசியம் வந்தே தீருவார்!'' என்றான் குண்டோதரன்.

'' உண்மைதான்! பல்லவ குலத்தின் கௌரவம்தான் அவருக்குப் பெரிது. அதற்காகத்தான் இவ்வளவு காலம் கழித்து வருகிறார். என் பேரில் உள்ள அன்புக்காக வருவதாயிருந்தால், முன்னமே வந்து என்னை அழைத்துப் போயிருக்க மாட்டாரா?'' என்றாள்.

குண்டோதரன் தன் மனத்துக்குள், 'ஆ! ஸ்திரீகளைத் திருப்தி செய்வது மிகவும் கடினமான காரியம். இப்படித் திருப்தி செய்ய முடியாத ஸ்திரீகளுக்காகச் சிலர் இத்தனை சிரமம் எடுத்துக் கொண்டு இப்படி உயிரை விடுகிறார்களே? என்ன பைத்தியக்காரத்தனம்?' என்று எண்ணினான்.

பிறகு, ''அம்மா ! பல்லவ குலத்தின் கௌரவத்தைக் காட்டிலும் தங்களுடைய அன்பே பெரிதென்று கருதி மாமல்லர் இங்கு ஒருநாள் மாறு வேடத்தில் வரவில்லையா ? அவருடன் புறப்பட்டு வந்து விடும்படி தங்களை எவ்வளவோ மன்றாடி வேண்டிக் கொள்ளவில்லையா ?'' என்று வெளிப்படையாகக் கேட்டான்.

''ஆம், குண்டோதரா ! அப்போது நான் செய்தது பெரிய தவறுதான். அந்தத் தவறுக்காக ஒன்பது வருஷம் என்னைத் தண்டித்தது போதும் என்று மாமல்லரிடம் சொல்லு! அவரை மீண்டும் ஒருமுறை பார்த்து அவரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்வதற்காகத்தான் இத்தனை நாள் நான் உயிரை வைத்துக் கொண்டிருக்கிறேன் என்றும் சொல்லு!'' என்றாள் சிவகாமி.

நல்லவேளையாக, அந்தப் பேதை தனக்கு இன்னும் எவ்வளவு கடூரமான தண்டனைகள் காத்திருக்கின்றன என்பதை அறிந்திருக்கவில்லை. அறிந்திருந்தால், எந்தக் காரணத்துக்காகவேனும் உயிரை வைத்துக் கொண்டிருக்க உடன்பட்டிருக்கக் கூடுமா ?

* * *

குண்டோதரன் கடைசியாகப் புறப்பட வேண்டிய சமயத்தில் தயங்கித் தயங்கி நின்றான். அவனைப் பார்த்தால் ஏதோ சொல்ல விரும்பியவன் போலவும், அதற்குத் துணிச்சல் வராமல் சங்கடப்படுவதாகவும் தோன்றியது.

சிவகாமி அவனைத் தைரியப்படுத்தி, '' இன்னும் ஏதாவது சொல்வதற்கு இருக்கிறதா? தயங்காமல் சொல்லு!'' என்றாள்.

''தேவி! வேறு ஒன்றுமில்லை. 'ஸ்திரீகளிடம் ரகசியம் தாங்காது' என்பதாக ஒரு வழக்கு உண்டு. மகாபாரதத்திலேகூட அந்த மாதிரி ஒரு கதை இருக்கிறது. அம்மா ! கோபித்துக் கொள்ளாதீர்கள். நான் வந்து போன விஷயமோ, மாமல்லர் படையெடுத்துவரும் விஷயமோ இங்கு பிரஸ்தாபம் ஆகக் கூடாது !''

# "செழுமையான நீண்ட கேசம்-சின்னஞ்சிறு வாதுமை வழங்கிய சீதனம்" என்கிறார் எக்ஸ்போர்ட் ஹவுஸ் நிர்வாகி அனிடா ராபின்ஸ்




Creative Unit A 1966

அதனால்தான், பழங்கால விஜய நகர சாம்ராஜ்யத்து ராணிகளின் கூந்தல் கணுக்கால் வரை நீண்டிருந்ததாம். தேங்காய், நிலக்கடலை, ஆமணக்கு ஆகியவற்றைவிட வாதுமையின் ஊட்ட குணங்கள் மிக மேம்பட்டதென அவர்கள் அறிந்திருந்தார்கள்.

இன்று ரோமம் உதிர்வதைத் தடுத்து உங்கள் கேசத்தை பளபளக்கும். ஆரோக்கியமுடன் வைத்திருக்க வாதுமையின் அதே ஊட்டகுணங்களை நீங்கள் பயன்படுத்த முடியும். இரவிலும் காலையிலும் லியூர் ஆல்மண்ட் ஹேர் ஆயிலைத் தலையில் தேய்த்து உள்ளிறக்குங்கள். இரவிலே அது மயிர்க்கால்களுக்கு ஊட்டமளித்து ஊக்குவிக்கும். பகலிலே உங்கள் கேசத்தைப் படிமானமுடன் பாங்காக வைத்திருக்கும். நல் வனப்புத் தோற்றத்தையும், ஆரோக்கியமான கேசத்தையும் விரும்பும் ஆண் பெண்கள் யாவருக்கும் அத்தியாவசியமானது இனிய மணமூட்டப்பட்ட லியூர் ஆல்மண்ட் ஹேர் ஆயில்.

என் கூந்தலழகுக்குக் கவர்ச்சியூட்டுகிறது லியூர்— ஆரோக்கிய மெருகுமிளிர அதனை வைத்திருப்பது லியூர் ஆல்மண்ட் ஹேர் ஆயில்.

**லியூர்**



சிவகாமியின் முகத்தில் சோகம் கலந்த புன்னகை அரும்பியது.

"குண்டோதரா! மாமல்லருக்கு இத்தனை நாளும் என்னால் ஏற்பட்ட சங்கடமெல்லாம் போதாதா? இந்த வஞ்சகப் பாதகர்களிடம் இன்னமும் அவரை நான் காட்டிக் கொடுப்பேனா? இங்கே எனக்குத் தெரிந்தவர்கள் நாக நந்தி பிக்ஷுவைத் தவிர யாரும் இல்லை. அவரும் அஜந்தாவுக்குப் போகிறார். ஆகையால், நீ கவலையில்லாமல் திரும்பிச் செல்!" என்றாள் சிவகாமி.

பிறகு, "குண்டோதரா! நீ உன்னை அநுமார் என்று சொல்லிக் கொண்டாய். இந்தப் பெயருக்குத் தகுதியாக நடந்து கொள். மாமல்லரை விட்டு ஒரு க்ஷணமும் பிரியாமல் இருந்து அவரைக் காப்பாற்று! இந்தப் பாவிகள் நெஞ்சிலே விஷம் உள்ளவர்கள்; விஷம் தோய்ந்த கத்தி எறிந்து கொல்கிறவர்கள். ஐயோ! என்னுடைய மூடப் பிடிவாதத்தினால் அவருக்கு மறுபடியும் ஆபத்து வரவேண்டுமா?" என்றாள்.

சிவகாமி ஏன் யுத்தத்தை விரும்பவில்லை என்பது அப்போதுதான் குண்டோதரனுக்குத் தெளிவாயிற்று. மாமல்லருக்கும் போர்க்களத்தில் ஏதாவது அபாயம் வரப் போகிறதே என்று அவள் கவலைப்பட்டதுதான் காரணம் என்று தெரிந்து கொண்டான். சிவகாமி தேவியிடம் அவனுடைய பக்தியும் அபிமானமும் முன்னைவிடப் பன்மடங்கு அதிகமாக வளர்ந்தன. (தொடரும்)

---

## புதிர்! புதிர்! புதிர்!

- ☐ எறும்பின் வாயை விட, சிறியது எது?
- ☐ ஒரு குழந்தையை விட அதிகமாகச் சப்தம் போடுவது எது?
- ☐ எப்பொழுதுமே தப்பாக உச்சரிக்கப்படும் வார்த்தை எது?
- ☐ படை வீரர்களுக்குப் பிடிக்காத மாதம் எது?
- ☐ ஒரு வயதான பிறகு குழந்தை என்ன ஆகிறது?
- ☐ 'ஆமாம்' என்று பதில் சொல்ல முடியாத கேள்வி எது?
- ☐ உலகம் எதில் முடிகிறது?
- ☐ பத்து ரூபாய் நோட்டை இரட்டிப்பாக்கச் சுலபமான வழி என்ன?
- ☐ ஓட முடியும், ஆனால் நடக்க முடியாது. அது என்ன?
- ☐ எந்த இடத்தில் தேடினால் நிச்சயமாகப் 'பணம்' கிடைக்கும்?
- ☐ ஒரு குடையைப் பிடித்துக் கொண்டு நான்கு பேர் போனார்கள். யாரும் நனையவில்லை எப்படி?



- ○ எறும்பு சாப்பிடும் ஆகாரம்!
- ○ இரண்டு குழந்தைகள்!
- ○ 'தப்பு'
- ○ 'மார்ச்'
- ○ இரண்டு வயதுக் குழந்தை ஆகிறது!
- ○ 'நீ தூங்கிக் கொண்டு இருக்கிறாயா?'
- ○ 'ம்'—ல்!
- ○ நோட்டை இரண்டாக மடிப்பது!
- ○ தண்ணீர்!
- ○ அகராதியில்!
- ○ அப்பொழுது மழை பெய்யவில்லை!

நன்றி: ஜோஸப் லீமிஸ் எழுதிய நூல்

தகவல்: பாலி

## பதில்! பதில்! பதில்!

# வட்ட மேஜை

இவ்வாரம் நேயர்கள் கவனத்துக்கு என்று தாங்கள் கல்கியின் பதினைந்து காசு விலையேற்றத்தைக் குறிப்பிட்டிருக்கிறீர்கள். கல்கியின் தொன்மையையும் பழம் சிறப்பையும் பண்பாட்டு மேன்மையையும் எண்ணும்தோறும் அன்றைய மூன்று அணாவுக்குச் சமமே இன்றைய 75 காசு. இஃதொன்றும் உண்மையான இலக்கிய ரசிகனுக்கு அதிகமல்ல! கண்ணதாசனின் கட்டுரையும், இந்திரா பார்த்தசாரதியின் தொடரும், பொன்னியின் புதல்வரின் வரலாற்றுத் தொடரும் அட்சரலட்சம் பெறுமே! தவிர்க்க முடியாத நிலையில் விலை உயரும் காரணத்தால் ஒவ்வொரு கல்கி வாசகரும் உறுதுணையாக இருப்பர்! இன்றைய வியாபார நோக்கில் தரம் தாழாத கல்கிக்கு எங்கள் உதவி என்றும் நிச்சயம் உண்டு. தமிழுலகுக்குக் கல்கியின் பணி தொடரட்டும்!

காட்பாடி
24-7-75 — கோவி. பரஞ்சோதி

கல்கி 20-7-75 இதழில் வெளியான சினிமாக் கதை — 'கேல் கேல் மே' என்ற இந்திப் படத்தின் விமரிசனத்தில் பேச்சுக் குறைந்த போலீஸ்காரர் "சத்யேன் கப்பு" என்று குறிப்பிட்டிருக்கிறது. பேச்சு குறைந்த போலீஸ்காரர் சத்யேன் கப்பு அல்ல. தேவ் குமார். சத்யேன் கப்பு கல்லூரிப் பேராசிரியராக வருகிறார்.

வடபழநி
18-7-75 — கே. ஸ்ரீனிவாசன்

27-7-75 இதழில் கருத்துப் படம் கண்டேன். வன்முறையாளர் என்பதில் ஆர்.எஸ்.எஸ். ஐயும் சேர்த்திருந்தது வருந்தற்குரியது. ஆராயாமல் செய்த முடிவாகப்படுகிறது.

எங்களுக்குப் போதிக்கப்பட்டதெல்லாம் (இப்பொழுதுதான் தடை செய்யப்பட்டிருக்கிறதே. அதனால் போதிக்கப்படுவதெல்லாம் என்று எழுதவில்லை) நாடு, நாடு, நாடுதான். இமயம் முதல் குமரி வரை ஒன்று—போன்ற கருத்துக்கள்தாம்.

திருப்பூர்
24-7-75 — சி. நாகரத்தினம்

"தீவசன்" தொடர்கதையில் ஒவ்வொரு வாரமும் ஒரு புகைப்படத்தைப் பிரசுரித்து வருகிறீர்கள். அப்புகைப்படத்துக்குச் சொந்தமான ஊரின் பெயரையும், நாட்டின் பெயரையும் வெளியிட்டால் பயனுள்ளதாக இருக்கும்.

சேலம்
13-7-75 — [illegible]

தில்லிச் சூழலில் நடக்கும் கதையானாலும் தில்லிக் காட்சிகள் சிலவே காரணமாக இடம் பெறுகின்றன. ஆரம்ப அத்தியாயத்திலேயே இக்குறிப்பு வெளியாயிற்று. — ஆர்.

# தென்னங்கீற்று

திரைப்படமென்றால் பாட்டு, டான்ஸ், காதல், நகைச்சுவை, சோகம், கதையில் சில எதிர்பாராத திருப்பங்கள் எல்லாம் தேவை என்று ஒரு சூத்திரத்தை ஏற்படுத்தியிருக்கிறது தமிழ்த் திரை உலகு.

இந்த ஃபார்முலா தயாரிப்பிலிருந்து விடுபட்டு ஒரு படமாவது வருமா என்று ஏங்கிய கலை உள்ளங்கள் பல.



சுஜாதா.
விஜய குமார்.

அப்படி ஒரு படம் வந்திருக்கிறது. அதுதான் தென்னங்கீற்று. ஆனால் என்ன ஏமாற்றம்! அது ஒரு நல்ல கலைப் படைப்பாக அமையவில்லை. இதற்கு முக்கிய காரணம் அடிப்படைத் தேவையான கதை சரியாக இல்லாததுதான்.

''தென்னங்கீற்று'' பருவமடைந்தும் பக்குவம் அடையாத ஒரு கன்னிப் பெண்ணின் கண்ணீர்க் கதை. உண்மை தெரிந்தும் அவளை ஏற்க முன்வருகிறான் ஒரு வாலிபன்; எந்தச் சிகிச்சையினாலும் குணப்படுத்த முடியாமற் போகவே அதிர்ச்சி வைத்தியத்தின் மூலம் சரிப்படுத்த முடிவெடுக்கிறான். ஆனால் விதி வேறு நினைத்து விடுகிறது. ஒரு சிறு வாழைப் பழத் தோல் அவள் வாழ வழி வகுத்துத் தந்துவிடுகிறது. வழுக்கி விழுந்த அவள் அந்த அதிர்ச்சியில் பக்குவம் அடைந்துவிடுகிறாள். குடும்பமே மகிழ்ச்சிக் கடலில் திளைக்கிறது. ஆனால் அதே சமயம், அவள் கணவன் ஏறிச் சென்ற ரயில் விபத்துக்குள்ளாகி, பத்திரிகைகளில் செய்தி வருகிறது. இதைப் பார்த்த கதாநாயகி அதிர்ச்சியில் இறந்து விடுகிறாள். படத்தின் அதிர்ச்சி தரும் முடிவு என்னவென்றால், விபத்தில் தெய்வாதீனமாகத் தப்பிப் பிழைத்த வாலிபன் ஓடோடியும் வருகிறான்— 'பெரியவ'ளாகிவிட்ட மனைவியின் பிரேதத்தைத்தான் காண்கிறான். பிறகு அவனும் மலை முகட்டில் ஏறித் தன் உயிரை முடித்துக் கொள்ளுகிறான்!

இந்தக் கதையில் எத்தனை நம்ப முடியாத திருப்பங்கள் பாருங்கள். ஏதோ வாழைப் பழத் தோலில் வழுக்கி விழுந்து அந்த அதிர்ச்சியினால் குணமடைந்தாள் என்று கதையை முடித்துவிட்டால் சரி என்று ஒப்புக் கொள்ளலாம். ஆனால் கதாசிரியர் அத்துடன் விடவில்லை. ஒரு ரயில் விபத்து; செய்தி கேட்டுக் காதலியின் அதிர்ச்சி; மரணம்; விபத்தில் காதலன் தப்பிப் பிழைத்தல்; காதலியின் மரணத்தைப் பார்த்து இவனுக்கு அதிர்ச்சி — தற்கொலை!

போதுமா? யாருக்கு ஸார் நம்பிக்கை ஏற்படும்? கதாபாத்திரங்களுக்கு ஏற்பட்ட அதிர்ச்சிகள் கிடக்கட்டும். மணிசேகரன் இப்படி ஒரு கதையை எழுதினாரே, அதுவே பெரிய அதிர்ச்சியாக இருக்கிறது நமக்கு! இந்தப் படத்தில் நமக்கு மகிழ்ச்சியும், பெருமையும் தரும் அம்சம் தமிழ் எழுத்தாளர் ஒருவர் திரைஉலகில் புகுந்து டைரக்டராக விளங்கிப் படமும் எடுத்துவிட்டார் என்பதுதான். இயக்குனராக மாறிய எழுத்தாளர் புதிய பொறுப்பை நன்றாக நிறைவேற்றிய சமயம் பழைய தொழிலைத் தொய்ய விட்டு விட்டாரே!

— காந்தன்

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி



**நா**ளை மாலை தாமோதரன் தாய் நாடு திரும்பி விடுவான்.

"நாளைக் காலையோடு என் வாழ்க்கையின் ஓர் அத்தியாயம் பூர்ணம் அடைந்து விடும்!" என்று நினைத்துக் கொண்டாள் மாலதி. அழுக்குப்போகத் துடைத்து மெழுகிவிட்ட மாதிரி மனம் நிம்மதியாக, நிர்மலமாக இருந்தது.

எட்டு வருடங்கள். எழுதிப் படித்துப் பார்த்தால் குறுகிய காலம்தான். ஆனால் இந்த எட்டு வருடங்கள் மாலதி அனுபவித்திருந்த துயரமும், "என் கணவனை என்னிடம் நிறுத்தி வைத்துக் கொள்ளும் கவர்ச்சி என்னிடம் இல்லையே!" என்ற மனக் குறையும், "என் அன்புக்குக்கூடவா அவரை நேர்ப்பாதையில் அழைத்துச் செல்லும் சக்தி இல்லை?" என்ற ஆறாத மனப் புண்ணும்— இவை அவள் இதயத்தில் பசுமையாகத்தான் இருந்தன, இந்த எட்டு வருடங்களுக்குப் பிறகும்.

அப்படி அவளிடமிருந்து மனத்தாலும் உடலாலும் பிரிந்து சென்ற தாமோதரன்தான் நாளை மாலை திரும்புகிறான் — மனம் மாறிய புது மனிதனாக. எவளுடைய சிவந்த நிறத்திலும் உடல் கவர்ச்சியிலும் தன்னை இழந்து மயங்கிக் கிடந்தானோ, அவள் அவனை உதறிவிட்டாள் — செல்வந்தன் ஒருவனோடு தன் வாழ்வை இணைத்துக் கொள்ள. இந்த அதிர்ச்சிக்குப் பிறகுதான் மாலதியின் உண்மையான உயர்வு அவனுக்கு உணர்வாகியிருக்க வேண்டும். "மாலதியை மறந்து ரூபியிடம் என்னை இழந்து பகுத்தறிவைத் துறந்திருந்த எனக்கு ஆண்டவன் வழிகாட்டிவிட்டான், அப்பா! இந்தியாவிலேயே வேலை தேடிக் கொண்டு விட்டேன். இனி மாலதியின் மனம் கோணாமல் இருப்பேன். **அவள்** செய்த பூஜா பலனால் அவளுக்குத் திரும்பவும் வாழ்வு கிடைக்கப் போகிறது!" என்று அவன் தன் தந்தைக்குக் கடிதம் எழுதியிருந்தான்.



# மகள் மாலதி

ருக்மிணி பார்த்தசாரதி

ஆயிரம் ரூபாய் முதல் பரிசுக் கதை

அந்தக் கடிதத்தைச் சாமிநாதன் மனைவி கமலத்துக்கும் மருமகள் மாலதிக்கும் உரக்கப் படித்துக் காண்பித்தார். பின் மாலதியிடம், ''அவன் நல்ல புத்தியோடு திரும்பி வருகிறான். அவனை மறுபடியும் அலைய விடாமல் தடுப்பது உன் சாமர்த்தியத்தைப் பொறுத்தது. மறுபடியும் எவளுக்காவது அவனைப் பறி கொடுத்துவிட்டுக் கையைப் பிசைந்து கொண்டு நிற்காதே!'' என்றார்.

மாலதி பதில் சொல்லவில்லை. மாமனாரின் வார்த்தைகள் தன்னை, தன் பெண்மையை, தன் சுயகௌரவத்தை, ஏன், தன் மனிதத் தன்மையையே அவமானப்படுத்துவதாக அவள் நினைத்தாள். 'என் பிள்ளை உனக்குத் துரோகம் இழைத்தால் அதில் ஆச்சரியப்பட என்ன இருக்கிறது? அவன் அழகும் கம்பீரமும் எங்கே? உன் சாதாரணத் தோற்றம் எங்கே? அவன் செய்த குற்றத்துக்கு நிஜமான பொறுப்பாளி நீதான்!' என்றுதானே அவர் சொல்லாமல் சொல்கிறார்?

'ஆனால் அவர் இப்படிச் சொல்வதிலும் நினைப்பதிலும் புதுமையாக ஆச்சரியப்படும்படி என்ன இருக்கிறது? நான் தாமோதரனுக்குப் பொருத்தமானவள் இல்லை என்பது தான் அவர் அபிப்பிராயம் — எப்போதுமே. ஒரு நிர்ப்பந்தத்துக்குக் கட்டுப்பட்டுத்தான் அவர் எங்கள் திருமணத்தை நடத்தி வைத்தார்' என்று தனக்குத் தானே ஆறுதல் கூறிக்கொண்டாள் மாலதி.

கமலத்துக்கு என்னவோ தன் பிள்ளை திருந்தி வருவது பற்றி எல்லையற்ற மகிழ்ச்சி. ''உனக்குக் கவர்ச்சி யில்லை என்பதெல்லாம் வெறும் கண் துடைப்பு மாலதி. நேர்மையாக வாழ நினைத்தால் முடியாதா என்ன? அவன் புத்தி கெட்டு அலைந்ததற்கு உன்னைப் பொறுப்பாளியாக்குவது அநியாயம். எப்படியோ, அவனுக்கு நேர் வழி தெரிந்ததே, அது வரை எனக்குச் சந்தோஷம்தான். உன் வேதனையை என்னால் புரிந்துகொள்ள முடியாதாம்மா? பெண்ணுக்குப் பெண்ணாகத் துடிக்க என்னால் முடிகிறது. அதனால் உன் வேதனை முடியும் காலம் வந்து விட்டது என்ற நினைப்பில் உனக்கு மேல் அதிகமாகச் சந்தோஷப்பட என்னால் முடிகிறது மாலதி! தன் கணவன் கொடியவன் என்ற எண்ணத்தை தீர



ணிப்பது கூட ஒரு பெண்ணுக்கு அத்தனை கஷ்டமில்லை. தான் ஈன்றெடுத்து வளர்த்து, அன்பைக் கொட்டி ஆளாக்கின மைந்தன் நேர்மையற்றவன் என்ற எண்ணத்தை ஜீரணிப்பது மிக மிகக் கடினமானது!''

'எத்தனை பரிவோடு, அன்போடு பேசுகிறாள் மாமி!' என்று வியந்து போனாள் மாலதி. கமலம் மாமி, ''அத்தை பகையுமில்லை, மாமி உறவுமில்லை!'' என்பார்கள். ஆனால் இங்கோ, சொந்த மாமாவான சாமிநாதனைவிட மாமி கமலம்தான் பாசத்தைக் கொட்டுகிறாள். இன்சொல்லைத் தவிர எதையுமே வழங்கத் தெரியாத உத்தமியாயிருக்கிறாள்.

பொழுது சாய்ந்து விட்டது.

நாளை மாலை தாமோதரன் வந்துவிடுவான்.

'அவர் வந்துவிட்டால் எப்படி இருக்கும்?' என்று நினைத்தவாறு உறக்கம் பிடிக்காமல் கற்பனையில் ஆழ்ந்து போனாள் மாலதி. மாமா சாமிநாதனின் குரல் மகிழ்ச்சி மயமாக வீடெங்கும் எதிரொலிக்கும். மாமியோ தன் மகிழ்ச்சியைத் தன் சமையல் திறனில் காட்டிவிட முயலுவாள். நெய் மணக்கும், விருந்துச் சாப்பாட்டில் வயிறும் உள்ளமும் நிறைந்து விடும்.

'நான்? நான்?' — மாலதியால் மேலே நினைக்க முடியவில்லை. அவளுக்குத் திருமணமானபோது வயது பத்தொன்பது. தாமோதரன் அப்போது இருபத்தாறு வயது இளைஞன். ஓராண்டு காலம் இனிக்க இனிக்க இல்லறம் நடத்தியபிறகு தாமோதரன், அமெரிக்கா சென்றான் — ஐந்து வருட காலம் வேலையில் அமர்ந்தவாறு மேல் படிப்பும் படித்துக்கொள்ள. அங்குதான் ரூபி அவன் வாழ்வில் புகுந்தாள். இப்படி அப்படி விஷயம் இந்தியாவை எட்டிற்று. சாமிநாதன் கலங்கக்கூட இல்லை. ''ஆண்மகன் அப்படித்தான் இருப்பான். இதில் அதிர்ச்சியடைய என்ன இருக்கிறது?'' என்று விஷயத்தை அதோடு மறந்து விட்டார். கமலம் மாமி தான் பிரமை பிடித்தவள் போல் காணப்பட்டாள் வெகு நேரம்வரை. அதன் பிறகு, ஒரேயொரு முறை விடுமுறைக்காகப் பதினைந்து நாட்கள் தாய்நாடு திரும்பினான் தாமோதரன். அந்தப் பதினைந்து நாட்கள் வயிற்று வலி என்று சுருண்டு படுத்த மாலதி அவன் அமெரிக்கா திரும்பிய பிறகுதான் பழையபடி நடமாடினாள். பிறகு, ''பொழுது போகவில்லை'' என்று அரசாங்கப் போட்டிப் பரீட்சை எழுதினாள். வெற்றியும் பெற்றாள். ''அழகு இல்லையே தவிர மாலதிக்கு ஆண்டவன் நிறையப் புத்திசாலித்தனத்தைக் கொடுத்திருக்கிறான்!'' என்று தம் பாராட்டைத் தெரிவித்தார் சாமிநாத மாமா. மாமி மட்டும், ''உன்னையும் பிள்ளையாக நினைத்துக் கொள்ளச் சொல்கிறாயா?'' என்று மனத் தாங்கலோடு கேட்டாள்.

ஐந்து வருடங்களுக்காக அமெரிக்கா சென்ற தாமோதரன் எட்டு வருடங்கள் தங்கினான். ரூபியைப் பற்றித் தன் தந்தைக்கு எழுதினான். அவன் இந்தியா வர மறுப்பதாகவும் அவளைப் பிரிந்து தன்னால் வாழ முடியாது என்றும் எழுதினான்.

மாலதி? அவளைத்தான் அவன் எத்தனை சுலபமாக மறந்து விட்டான்?

''அவன் இனி தாய்நாடு திரும்புவானோ என்னவோ?'' என்று அங்கலாய்க்க ஆரம்பித்தார் சாமிநாதன். அந்தக் கலக்கம் மாலதியின்மீது கோபமாக வெடித்தது. ''உன்னிடம் அழகு இருந்தால் அந்த அழகுக்காகவாவது அவன் வந்திருப்பான். என் பிள்ளையை விரட்டி விட்டாயே! அவனைக் காணமல் நான் என்ன செய்வேன்!'' என்று அவர் புலம்பினார்.

''இப்படி அநியாயமாய் மாலதியை ஏசாதீர்கள்'' என்று கமலம் மாமி சொன்னாலும் பிள்ளையைப் பிரிந்து விடுவோமோ என்ற அச்சத்தில் அவளும் புலம்பத்தான் செய்தாள். ஆனால் அவள் கோபம் மாலதியின் மீதல்ல; ரூபியின் மீதுதான் வெடித்தது.

'நாளை மாலை அவர் திரும்புகிறார்' என்று நினைத்துக் கொண்டாள் மாலதி. 'மாமி காலை ஒன்பது மணிக்கு ஏதோ கடைக்குப் போக வேண்டும் என்றாள். நானும் ஏறக்குறைய அதே நேரத்துக்குத்தான் அலுவலகம் கிளம்ப வேண்டும்....

சட்டென்று மாலதிக்குச் சிரிப்பு வந்தது. எழுந்து சென்று மின்விளக்கைப் பொருத்தி விட்டுத் தன் பிரதிபிம்பத்தைக் கண்ணாடியில் பார்த்துக் கொண்டாள். 'மாமா சொல்வது உண்மைதான். தாமோதரன் பார்ப்ப

# புதிய அனுபவம், பேரானந்தம்



ADROIT/925

**செஞ்சுரி**
**பருத்தித் துணிகள்**



**செஞ்சுரி** -100% பருத்தித் துணிகள்

தி செஞ்சுரி ஸ்பின். அண்டு மான்யு.
கம். லிமிடெட், பம்பாய்-400 025.



மார்க் ட்வைன் தமது உடை விஷயத்தில் எப்போதும் அவ்வளவு அக்கறை எடுத்துக் கொள்ளாதவர். ஒரு தடவை ஒரு பெண்மணி, ''என்ன சார் இது? 'டை'கூடக் கட்டாமல் அப்படியே வந்திருக்கிறீர்களே!'' என்று கேட்டாள்.

விருந்து முடிந்து மார்க் ட்வைன் திரும்பச் சென்ற சிறிது நேரத்துக்கெல்லாம் ஓர் ஆள் வந்து ஒரு பொட்டலத்தைத் தந்து மார்க் ட்வைன் கொடுத்துவிட்டு வரச் சொன்னதாகச் சொன்னான்.

பொட்டலத்தைப் பிரித்துப் பார்த்தபோது அதில் ஒரு 'டை'யும், அந்தப் பெண்மணிக்கு ஒரு கடிதமும் இருந்தன. ''இது என்னுடைய டை. நான் 'டை' கட்டாமல் உங்கள் வீட்டுக்கு வந்து அரை மணி நேரம் இருந்திருக்கிறேன். என் கழுத்தில் டை இல்லாதது குறித்து நீங்கள் மிகவும் வருத்தப்பட்டுக் கொண்டீர்கள். எனவே இந்த 'டை'யை அரைமணி நேரம் பார்த்திருந்துவிட்டுத் திருப்பி அனுப்பி விடவும்!'' - ராதா

---

வர்களைத் தன்னிடம் ஈர்க்கும் கம்பீரத் தோற்றம் பொருந்தியவர். நானோ அழகற்றவள். சாம்பல் பூசினாற்போன்ற நிறம்; செழுமையற்ற உடல்வாகு.' அவளுக்கு மறுபடியும் சிரிப்பு வந்தது. சிரித்தவாறே போய்ப் படுத்துக்கொண்டாள். ஜன்னல் வழியே பாலாகப் பொழிந்த நிலவின் ஒளி தண்ணென்று அவள் கேசத்தை வருடிச் சென்றது. தாய்க் கரம் போல்.

தாய்க்கரம் — அது எப்படி இருக்கும்?

தன் சிறுமிப் பருவத்தை நினைத்துக் கொண்டாள் மாலதி. அப்பா இறந்தபோது அவளுக்கு எட்டு வயது. அம்மா ஒருநாள் அவளைத் தன் சகோதரன் சாமிநாதனின் வீட்டுக்கு அழைத்து வந்தாள். ''அண்ணா! என் பெண் இதோ! இவளை நீயும் மன்னியும்தான் வளர்க்க வேண்டும். இந்தப் பெட்டியில் என் நகைகள் இருக்கின்றன. பாங்கில் என் பெயரில் இருக்கும் பணத்தை உன் பெயருக்கு மாற்றியிருக்கிறேன். என் வீட்டை உன் பெயருக்கு எழுதி வைத்துள்ள பத்திரம் இதோ... இதையெல்லாம் உனக்குக் கொடுக்கிறேன், உன்னை நம்பி. பதிலுக்கு மாலதியை வளர்த்து உன் பிள்ளை தாமோதரனுக்கு மணம் முடித்து வைக்க வேண்டும். சம்மதமா?''

நகைகள், பணம், வீடு... எதிரே, உயிரை உதறத் துடிக்கும் சகோதரி... அவளுடைய எட்டு வயது மகள். ஏழைச் சாமிநாதன் அதிக நேரம் யோசிக்கவில்லை.

''செய்கிறேன், சம்மதம். உன் பெண் மாலதி என் பிள்ளை தாமோதரனை மணப்பாள், நான் உயிரோடு இருந்தால்!'' என்றார்.

''மன்னி! உனக்கும் சம்மதம்தானே?'' என்றாள் மாலதியின் தாயார், கமலத்தின் பக்கம் திரும்பி.

''சம்மதம்தான்!'' என்றாள் கமலம்.

அதன் பிறகு ஒரு வாரம்கூட மாலதியின் தாய் உயிர் வாழவில்லை.

அந்த வாக்கைக் காப்பாற்றத்தான் மாமா என்னைத் தம் பிள்ளைக்கு மணம் முடித்து வைத்தார் என்று நினைத்துக் கொண்டாள் மாலதி. 'நகைகள், பணம், வீடு ஆகியவற்றைக் கொண்டு தம் பிள்ளையை மட்டுமில்லை, என்னையும் படிக்க வைக்கவில்லையா? அவர் வரை அவர் நேர்மையாகத்தான் நடந்து கொண்டிருக்கிறார், தம் மனச்சாட்சிக்கு விரோதம் இல்லாமல். நான் அழகற்றவள் என்பதால் அவருக்குக் குறை இருந்தால் அது இயற்கைதானே?'

**யா**ரோ தன் அருகே நடந்து வரும் சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தாள் மாலதி. கமலம் மாமிதான். பூமி அதிராமல் நடந்து வந்து அவள் மாலதியின் அருகே உட்கார்ந்து கொண்டாள்.

''இன்னுமா நீ தூங்கவில்லை, மாலதி!'' என்றாள் மாமி, மிருதுவாக.

''தூக்கம் வரவில்லை, மாமி!''

''தாமோதரனை நினைத்துக் கொண்டிருந்தாயா?''

''அவரை, உங்களை, மாமாவை...''

கமலம் முறுவலித்தாள். ''அவன் திரும்பி வருவதில் எனக்கு எத்தனை நிம்மதி தெரியுமா, மாலதி? அவனை, உன்னை — இரண்டு பேரையும் நான்தான் வளர்த்தேன். உன்னுடைய குணமும் உயர்வும் அவனுக்குக் கிடையாது. பண்பும், பாசமும், அன்பும், பரிவும் உன் இயற்கையோடு ஒன்றின குணங்கள். அவனோ அகம்பாவம், பிறர் மனத்தைப் புண்படுத்தக் கூசாத இதயம், இவற்றைக் கொண்டவன். ஆனால், என்வரையில் நீங்கள் இருவருமே எனக்கு மிக மிக அருமையானவர்கள்.''

மாமி மௌனச் சிலையாக அமர்ந்திருந்தாள். ஒரு கணம்.... நிலவின் ஒளியில் அவள் முகம் பால் வெளுப்பாகத் தோற்றம் அளித்தது. எத்தனை அருள் அந்த முகத்தில்! எத்தனை மென்மை அந்த முறுவலில்! எத்தனை கனிவு அந்தப் பார்வையில்!

'இவளையா....இந்தத் தாயையா நான்..?' மாலதியின் இதயம் ஈட்டி. பாய்ந்தாற்போல் துடித்து ஓய்ந்தது.

''அவன் திரும்பி வருகிறான், மாலதி... என் மகன் அப்படி அடியோடு நியாய அநியாயங்களை மறந்துவிட்ட அயோக்கியனில்லை என்ற எண்ணம் எத்தனை இதமாயிருக்கிறது தெரியுமா? இனிமேலாவது உன் உயர்வை அவன் புரிந்து கொண்டால் சரி. தான் எத்தனை அதிர்ஷ்டசாலி என்பதை உணர்ந்து கொண்டால் சரி...''

சட்டென்று மாலதி கமலம் மாமியின் கைகளை எடுத்துத் தன் கண்களில் ஒற்றிக் கொண்டாள். இதயத்தில் கனமாய் அழுத்தியதை வாய்விட்டுக் கொட்டிவிட வேண்டுமென்ற துடிப்பு எழுந்தது. ஆனால் அதற்கு அவள் நெஞ்சில் வலுவில்லை.

''மாமி... நீங்கள் என்வரை பெற்ற தாய்க்குச் சமமானவர். நீங்கள் என்னை...'' வார்த்தைகள் நாவில் சிக்கிச் சிதைந்து போயின. கண்கள் சட்டென்று நீரில் நனைந்தன.

''அசடே!'' மாமி அவள் தலை முடியை வாஞ்சையோடு வருடி விட்டாள். ''தூங்கு! உனக்கு எந்தக் கஷ்டமும் ஏமாற்றமும் ஏற்படாது. நிம்மதியாகத் தூங்கு, மாலதி'' மாமி எழுந்து அறையை விட்டு வெளியேறினாள்.

மாமியின் ஸ்பரிசம் தந்த இதம் தாலாட்டாக அமைந்ததோ? மாலதி சின்னஞ் சிறு குழந்தையைப் போல் உறங்கிப் போனாள்.

மறுநாள் காலை ஒன்பது மணி.

மாமி கடைக்குச் செல்லத் தயாராக வாசலுக்கு வந்தபோது, மாலதி அவளை வழியனுப்ப வந்தாள். மௌனமாகக் குனிந்து மாமியின் கால்களைத் தொட்டுவிட்டு நிமிர்ந்தாள். வாய் நிறைந்த புன்னகை.

''பைத்தியக்காரப் பெண்ணே! என்ன இன்று உனக்கு?'' மாமி தானும் முறுவலித்தவாறு மாலதியின் கன்னத்தைத் தொட்டுச் செல்லமாகத் தட்டினாள். பின் முறுவல் மாறாமலேயே தெருவில் இறங்கி நடந்தாள். மாமியின் உருவம் கண்களிலிருந்து மறையும்வரை பார்த்துக் கொண்டிருந்த மாலதிக்கு ஏனோ வாய்விட்டு அழ வேண்டும் போல் இருந்தது.

மாலதி தன் அறைக்கு வந்தாள். தயாராக எழுதி வைத்திருந்த கடிதத்தைப் பூஜை அறையில் வைத்தாள். மாமி வரும்போது அவள் கண்களில் கட்டாயம் படும். தன் ஸூட்கேஸைக் கையில் எடுத்துக் கொண்டாள்.

தளராத உறுதியோடு மாலதி டாக்ஸி ஸ்டாண்டை நோக்கி நடக்கலானாள். அங்கிருந்து, பெண்கள் விடுதி ஒன்றில் தான் முன்பே ரிஸர்வ் செய்திருந்த வசதியான அறைக்குச் சென்றாள். இன்றிலிருந்து அது தான் அவள் இல்லம்.

பன்னிரண்டு மணிக்கு வீடு திரும்பிய கமலம், தன் வழக்கப்படி சுவாமி விளக்கை ஏற்றிவிட்டுச் சாப்பிடலாம் என்று நினைத்துப் பூஜை அறைக்கு வந்தபோது அந்தக் கடிதம் அவள் கண்களில் பட்டது.

அன்புள்ள மாமி,

இன்று மாலை உங்கள் மகன் திரும்புகிறார். ரூபியின் கணவன் திரும்புகிறார். பெற்றோரிடம். இனி இங்கு எனக்கு இடமில்லை. எப்போது அவர் என்னை மணந்து கொண்டு இல்லறம் நடத்தியபிறகு கூசாமல் வேறொரு பெண்ணோடு வாழ்வைப் பகிர்ந்து கொண்டாரோ, அப்போதிலிருந்து அவருக்கும் எனக்கும் உள்ள பந்தம் அறுந்து விட்டது.

அவர் நடத்தைக்கு மாமா எத்தனை காரணங்கள் காட்டினால் என்ன? தனிமை, கவர்ச்சி, சந்தர்ப்பங்கள் — எத்தனை காரணங்கள் இருந்தால்தான் என்ன? நானும் அலுவலகம் செல்பவள்தான். விதம் விதமான ஆடவர்களுக்கு மத்தியில் வேலை பார்க்கிறேன். தனிமை, கவர்ச்சி, சந்தர்ப்பம் என்று எதையாவது சொல்லிக் கொண்டு நான் என் பெண்மையைக் களங்கப்படுத்திக் கொண்டிருந்தால், அதை மாமாவால் ஏற்க முடியுமா?



'மாடர்ன் ஆர்ட்'டின் தந்தை என்று போற்றப்படும் 'பிக்காஸோ' தம்முடைய சித்திரங்களையெல்லாம் வைத்து ஒரு கண் காட்சி நடத்தினார். அங்கு அப்போது ஒரு திருடன் வந்து தப்பி ஓடிவிட்டான். பிக்காஸோ போலீஸாரின் உதவிக்காக அந்தத் திருடனின் உருவத்தைப் பேப்பரில் வரைந்து கொடுத்தனுப்பினார். அந்தப் படத்தின் உதவியால் பிடிபட்டவை: இரண்டு குதிரைகள், ஒரு தகர டப்பா, ஒரு கார்க் ஸ்க்ரூ, ஒரு பூனை! -- ராதா

xxxxxxxxxxxxxxxxxxxxxxxxx

தாம்பத்தியத்தை நான் புனிதமாக நினைத்தேன். இன்னும் நினைக்கிறேன். அந்தப் புனிதத்தை மாசுபடுத்திய உங்கள் மகனை என்னால் மன்னிக்க முடியாது. அவர் முகத்தைக் கண்ணெடுத்துப் பார்க்கக்கூட நான் விரும்பவில்லை....

நான் செய்த பூஜையின் பலனால் தன்னோடு இணைந்து வாழும் வாய்ப்பு எனக்குத் திரும்பக் கிடைக்கப் போவதாய்த் தாமோதரன் மாமாவுக்கு எழுதியிருந்தார் அல்லவா? அவரோடு திரும்பவும் இணைந்து வாழவேண்டும் என்று நான் ஆண்டவனைப் பிரார்த்தித்ததே இல்லை. ரூபியைப் பற்றி அறிந்ததிலிருந்து தாமோதரனை நான் அந்நியனாகத்தான் நினைத்து வந்திருக்கிறேன்.

உங்கள் பிள்ளைக்கு மறுவாழ்வு அமைத்துக் கொடுங்கள். அவர் இஷ்டப்படி, மாமாவுக்குத் திருப்தி ஏற்படும்படி, அழகி ஒருத்தியை அவருக்கு மணம் முடித்து வையுங்கள். ''அமெரிக்கா ரிடர்ன்ட்'' அல்லவா உங்கள் மகன்? முதல் தரமான பெண் கிடைப்பாள்.

ஆனால், மாலதி என்றும் உங்கள் மகள் தான். உங்களைத் தவிர எனக்குத் தாய் கிடையாது. உங்கள் ஆசீர்வாதத்தை விட உயர்ந்ததாக நான் கருதும் பொருள் உலகிலேயே கிடையாது. என்னை என்றும் உங்கள் மகளாகவே நினைத்து வாழ்த்துங்கள்.

கணவனோ, மகனோ, உலகமோ உங்களை வருத்தினால், இந்த மகள் உங்களுக்குப் பணிவிடை செய்வதையே தவமாக நினைப்பாள் என்பதை மறந்து விடாதீர்கள்.

தாயே! தங்களை வணங்குகிறேன். ஆசி கூறுங்கள்!

—மாலதி''

அடியில் மாலதி தங்கப் போகும் பெண்கள் விடுதியின் முகவரி தெளிவாக எழுதப்பட்டிருந்தது.

கடிதத்தை எடுத்துச் சென்று தன் கணவனிடம் கொடுத்தாள் கமலம். அதைப் படித்துவிட்டுக் கோபத்தில் கண் சிவக்க எழுந்து நின்றவரின் முகத்தைப் பார்த்துச் சாந்தமாகச் சொன்னாள்: ''மாலதி மீது நான் கொண்டிருந்த மதிப்பு இன்று உயர்ந்து விட்டது!''

# ராஜேஷ் கன்னா

மற்றுமோர்
விருதுக்குத் தகுதியான
தோற்றத்தில்



நான்கு முறை விருது பெற்ற ராஜேஷ் கன்னா புதியதோர் பாத்திரத்தில், ஃபாஷன் உலகை மீண்டும் கொள்ளை கொள்ளும் பவனி, பாம்பே டையிங்கின் ஷர்ட்டிங் மற்றும் ஸூட்டிங்குகளில்—அன்றாடம் ஒரு புது டிஸைன், செயற்கை இழை ஷர்ட்டிங்குகள் 50/50, 67/33, 80/20 மற்றும் 100% பாலியெஸ்டர் பிரிண்ட்கள், பாலியெஸ்டர் டெனிம்கள் மற்றும் டெக்ஸ்ட்ரைஸ்ட் ஸூட்டிங்குகளின் எண்ணற்ற, எண்ணங்கவர் தினுசுகள் மூலம்!

**ஆயிரமாயிரம் வகைகள்— அன்றாடம் புதுப்புது டிஸைன்கள்!**

## **கபித்தான்** பாலியெஸ்டர் ஷர்ட்டிங்குகள்
## **வாட்ரீன்** பாலியெஸ்டர் ஸூட்டிங்குகள்

# சவரில்

ரேகா சந்திரநாத்

## 1. விமலா எங்கே?

அந்தப் பெண் கிறீச்சிட்டு அலறின சத்தம் அவர்கள் இருவருக்குமே நன்றாகக் கேட்டது.

''ரமேஷ்! நிறுத்துங்கள் வண்டியை'' என்று பரபரப்புடன் கூறிக் கொண்டே எழுந்தாள் மாலதி.

'சடக்'கென்று பிரேக்கை அழுத்தினான் ரமேஷ். ஜீப் ஒரு குலுங்குக் குலுங்கி விட்டு நின்றது.

''என்ஜினை ஆஃப் செய்துவிடுங்கள். என்னமோ அசாதாரணமாக நடந்து கொண்டிருக்கிறது இங்கே. யாரோ பெண் ஆபத்தில் மாட்டிக் கொண்டிருக்கிறாள்'' என்றாள் மாலதி.

'கிளச்'சென்று ஒரு குமிழை இழுத்து என்ஜினை அடக்கினான் ரமேஷ்.

''ஒரு பெண் அலறின மாதிரி இருந்ததே—உங்களுக்குக் கேட்கலே, ரமேஷ்?''

''ஆமா. ஆனால் இங்கே ஒன்றையும் காணோமே? இரண்டு பக்கமும் ஒரே சவுக்குத் தோப்பாகத்தானே இருக்கிறது?'' என்றான் ரமேஷ்.

மாலதி ஸீட்டிலிருந்து சற்று எம்பி நின்று பதைபதைப்போடு சுற்றுமுற்றும் பார்த்தாள். கூந்தல் பறக்காமல் இருக்க மப்ளர் மாதிரி கட்டியிருந்த ரோஸ் நிறக் கைக்குட்டையின் பின்னணியில், மின்னி நகர்ந்த அவளுடைய கருவிழிகளில் சொல்லி முடியாத பீதி தெரிந்தது.

சாலையின் இருபுறமும் கண்ணுக்கெட்டிய வரையில் மரங்கள், மரங்கள், மரங்கள்தான். அமைதி அமைதி அமைதிதான். ஒரு சின்ன இலை நகர்ந்த ஓசைகூடக் கேட்கவில்லை. முழுக்க இரண்டு நிமிஷ நேரம் ஓடி மறைந்தது.

மாலதி ரமேஷைப் பார்த்தாள்; ரமேஷ் மாலதியைப் பார்த்தான்.

''ஒருவேளை நம்முடைய பிரமையாக இருக்குமோ?'' என்றான் ரமேஷ்.

''இல்லை ரமேஷ்... ஐ யாம் ஷ்யூர்...ஐ ஹேர்ட் இட்...நோ டவுட்'' என்றாள் மாலதி.

ரமேஷ் முகவாயை யோசனையுடன் தடவிக் கொண்டு நின்றான்.

''நிச்சயமாக அது ஒரு பெண்ணின் குரல் தான். பேயையோ பிசாசையோ பார்த்துட்டா அலறுவாங்களே, அந்தமாதிரிக் கத்தினுள். இதோ, இந்தப் பக்கமாக இருந்து தான் சத்தம் வந்தது'' என்று மாலதி கடல் பக்கமாக இருந்த சவுக்குத்தோப்பைக் காட்டினுள்.

ரமேஷ் 'டாஷ்' போர்டைத் திறந்து தன் கைத் துப்பாக்கியை எடுத்துக் கொண்டான்.

''நீ இங்கேயே இரு. நான் போய்ப் பார்த்துவிட்டு வருகிறேன்'' என்று வண்டியிலிருந்து கீழே இறங்கினுன்.

''ரமேஷ்! ஆபத்திலே கீபத்திலே போய் மாட்டிக்கிடாதீங்க... எனக்குப் பயமாக இருக்கு... நான் தனியாக இங்கே இருக்க

''இது அந்தப் பெண்ணுடையதுதான்... யாரோ அவளைப் பலாத்காரம் பண்ணியிருக்காங்க... பிராவைப் பிடுங்கி எறிஞ்சிருக்காங்க... இதோ பாருங்க ரமேஷ், அவளைத் தர தரவென்று இழுத்துப் போன சுவடுகளை... ஓ, அந்தப் புதரோட அதுவும் முடிஞ்சு போச்சு... ஒருவேளை அந்தப் புதருக்குள் அவளை...'' என்று நடுக்கத்துடன் கூறினுள் மாலதி.

ரமேஷ் புதர் அருகில் செல்ல ஓரடி எடுத்து வைத்தான். ''வேண்டாம், போகாதீங்க... யாராவது அதற்கு அப்பாலே மறைஞ்சுக்கிட்டிருந்தாலும் இருக்கலாம். நீங்க போகக் கூடாது; நான் விடமாட்டேன்'' என்று அவனைப் பிடித்துப் பின்னுல் இழுத்தாள் மாலதி.

# இரு விழிகள்

மாட்டேன்... நானும் வரேன்'' என்று வண்டியிலிருந்து கீழே குதித்தாள் மாலதி.

அப்போது—

தூரத்தில் ஒரு நாய் குரைத்தது.

''பார்த்தீர்களா! பார்த்தீர்களா! நாய் குரைக்கிறது. — யாரோ அங்கே இருக்காங்க'' என்று ரமேஷின் கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்ட மாலதி பயத்தால் அவனுடன் ஒட்டிக் கொண்டாள்.

''கரெக்ட்... ஆனுல் உங்க அண்ணு பெரிய ஸி.ஐ.டி. ஆபீஸர்... அவன் தங்கை நீ இப்படிப் பயந்து நடுங்குகிறதுதான் வேடிக்கையாக இருக்கு. தைரியமா என் பின்னுலே வா... நீ சொல்றமாதிரி அங்கே ஒரு பெண் ஆபத்திலே மாட்டிக்கிட்டிருந்தா நாம கட்டாயம் அவளுக்கு உதவி பண்ணியாகணும். அது நம்ப கடமை... கமான்... ஹரியப்...''

இருவரும் நாய் குரைத்த திசையை நோக்கி ஓடினுர்கள். தோப்புக்குள் போக ஒற்றையடிப் பாதைகூட இல்லை. வழி நெடுக முட்புதர் மண்டிக் கிடந்தது. ''பார்த்து வா— முள்ளிலே ஷிபான் சிக்கிக்கப் போகிறது'' என்ருன் ரமேஷ்.

நூறு கஜம் ஓடி, ஒரு சிறு மணல் மேட்டைக் கடந்து அப்பால் இறங்கும்போது, ''ரமேஷ்! அதோ பாருங்கள்!'' என்று கூவினுள் மாலதி.

ரமேஷ் திரும்பிப் பார்த்தான். அங்கே, தரையில்—

பெண்கள் அணியும் ஒரு பிரா கிடந்தது.

ரமேஷ் துப்பாக்கி முனையால் அதை எடுத்து உற்றுப் பார்த்தான். இரண்டு 'கொக்கிகள்' அறுந்து தொங்கிக் கொண்டிருந்தன.

''என்ன மாலு—பச்சைக் குழந்தை மாதிரி? எனக்குத் தெரியாதா? அந்தப் புதர் பின்னுல் யாரும் இல்லே. நீ வேணு பார்த்துக்கோ'' என்ற ரமேஷ் ஒரு கல்லை எடுத்துப் புதர் மீது எறிந்தான். புதர் இலேசாக அதிர்ந்துவிட்டு அடங்கிற்று. யாரும் கதறிக் கொண்டு சாயவோ, எழுந்து ஓடவோ இல்லை.

''பார்த்தாயா? நோபடி தேர்... கம் வித் மீ'' என்று புதர் அருகில் ஓடி அப்பால் எம்பிப் பார்த்தான் ரமேஷ்.

புதருக்கு அப்பால் ஒரு பெரிய மைதானம் விரிந்து கிடந்தது. பச்சைப் பசேல் என்று புல்லால் மூடிய மைதானம். மைதானத்தின் கோடியில் ஒரு பாழடைந்த மண்டபம்.

''புல்லிலே எந்தத் தடயத்தையும் காணுமே... ஒருவேளை அந்த மண்டபத்துக்கு அவளைத் தூக்கிக்கொண்டு போயிருப்பார்களோ?'' என்று புருவத்தை யோசனையுடன் உயர்த்தினுன் ரமேஷ்.

''எங்கே வேண்டுமானுலும் இழுத்துக்கிட்டுப் போகட்டும். இனிமே நாம போக வேண்டாம். இப்பவே ரொம்ப தூரம் வந்து விட்டோம். இருட்ட வேறே ஆரம்பித்து விட்டது. வாங்க போகலாம்'' என்ருள் மாலதி.

தூரத்தில் நிழல் போல் தெரிந்த மண்டபத்தையே பார்த்துக் கொண்டு நின்ருன் ரமேஷ். சூழ்ந்து வந்த இருளில் சிறுகச் சிறுக மூழ்கிக் கொண்டிருந்தது அந்த மண்டபம். அதன் பின்னுல் பெரிய மணல் சரிவும், சரிவின் விளிம்பில் கருநீலமாகி விட்ட கடல் அலைகளும் தெரிந்தன.

''அங்கே யாருமே இருக்கிறதாகத் தெரியலையே ரமேஷ்!'' என்ருள் மாலதி.

**இந்த மர்ம நாவலை நீங்கள் படித்து வரும்போதே ரூபாய் 500/- பரிசு பெறும் வாய்ப்பையும் அடைகிறீர்கள்!**

இந்த நாவலைப் படித்துக்கொண்டு வரும்போதே ரூ. 500/- பரிசு பெறும் வாய்ப்பும் உங்களுக்கு இருக்கிறது.

கதை முடிவதற்கு இன்னும் நாலு அத்தியாயங்களே பாக்கி இருக்கும்போது அடுத்த பத்து நாட்களுக்குள் கதையின் முடிவை ஊகித்துச் சொல்லுமாறு நேயர்களைக் கேட்போம். ரேகா சந்திரநாத் எம்மிடம் எழுதித் தந்திருக்கும் முடிவினை ஊகித்து எழுதுகிறவருக்கு ரூ. 500/- பரிசு வழங்கப்படும். ரேகா சந்திரநாத் போலவே அதே நடையைக் கையாண்டு எழுதத் தேவையில்லை. கதையின் முடிவு இன்னது என்று ஊகித்துச் சுருக்கமாய்க் கூறினால் போதும்.

ஒருவருக்கு மேல் சரியான விடை எழுதியிருந்தால் பரிசுத் தொகை பகிர்ந்து அளிக்கப்படும். யார் கண்டது? முழுப் பரிசையும் நீங்களே கூடத் தட்டிக்கொண்டு போகலாம்.

**முக்கிய நிபந்தனை:** இப்போட்டியில் பங்கு கொள்கிறவர்கள் ரேகா சந்திரநாத்தின் நண்பர்களாகவோ, உறவினர்களாகவோ, கல்கி காரியாலயத்தைச் சேர்ந்தவர்களாகவோ, அவர்களின் உறவினர்களாகவோ எழுத்தாற்றலால் ஏற்கனவே பிரபலம் அடைந்தவர்களாகவோ இருக்கக் கூடாது.

''பின்னே இதுவரையில் இழுத்துக் கொண்டு வரப்பட்ட பெண்ணும் அவளை இழுத்து வந்தவர்களும் எங்கே போனார்கள்?'' என்று கேட்டான் ரமேஷ்.

''பாவம், உயிரோடு இருக்கிறாளோ? கொன்றுவிட்டார்களோ?'' என்றாள் மாலதி.

''உயிரோடுதான் இருப்பாள் என்று தோன்றுகிறது. துப்பாக்கியால் சுட்ட சத்தம் ஏதும் கேட்கவில்லையே?'' என்றான் ரமேஷ்.

''கத்தியால் குத்தியிருந்தால்—?''

''ரத்தக் கறைகள் வழிநெடுகப் பட்டிருக்குமே?''

''கழுத்தை நெரித்துக் கொன்றிருந்தால்?'' என்று கேட்டாள் மாலதி. அவள் உடல் நடுங்குவது நன்றாகத் தெரிந்தது. ''ரமேஷ்! எனக்கென்னவோ அப்படித்தான் நடந்திருக்கும் என்று தோன்றுகிறது. ஏதோ நோக்கத்துடன் தூக்கி வந்திருக்கிறார்கள். இங்கே பலாத்காரம் செய்திருக்கிறார்கள். அவள் சம்மதிக்கவில்லை. கூச்சலிட்டிருக்கிறாள். உடனே கழுத்தை நெரித்து—''

''சரி, மேடம் — உடல் எங்கே?'' என்று கேட்டான் ரமேஷ்.

''உடலா?'' என்று யோசனையுடன் கேட்டுக்கொண்டே பாழடைந்த மண்டபத்தைப் பார்த்த மாலதி, ''ரமேஷ்! ரமேஷ்! அதோ பாருங்கள்!'' என்று பரபரப்புடன் கூவினாள்.

ரமேஷ் திரும்பிப் பார்த்தான். இப்போது இருட்டவே ஆரம்பித்து விட்டது. அந்த மங்கலில், தூரத்தில்—

கடலோரத்தில்—

ஒரு படகில் யாரோ இரண்டு பேர் வெள்ளையாக எதையோ கொண்டு போய் ஏற்றிக் கொண்டிருப்பது தெரிந்தது.

''அது அவர்கள்தான்... மாலு! ஹரி அப''

அவளைப் பிடித்து நிறுத்தின மாலதி சொன்னாள்: ''பிரயோசனமில்லை, ரமேஷ்! நாம் அங்கே போய்ச் சேர்வதற்குள் படகு வெகு தூரம் போய்விடும்... அது விசைப் படகு.''

அவள் சொன்ன மாதிரியேதான் நடந்தது. அரை நிமிஷத்துக்குள் படகு கிளம்பி பின் இரண்டு நிமிஷங்களுக்குள் இருளில் மறைந்தது. இனி பின்தொடர்ந்து பயனில்லை...

ரமேஷ் ஜீப்பைப் போலீஸ் க்வார்டர்ஸ் வாசலில் நிறுத்தினான். மாலதி குதித்தாள்.

''ஹாய் மாலு! எப்படி இருந்தது பிக்னிக்?'' என்று கேட்டுக் கொண்டே வந்தான் மாலதியின் அண்ணன் சேகர்.

''அதை ஏன் கேட்கிறே, போ'' என்று மாலதி ஆரம்பித்தாள்.

''இதோ பார், மாலு. அதையெல்லாம் சாவகாசமாக வீட்டுக்குப்போய் உங்க அண்ணாகிட்டே சொல்லு... முதல்லே எனக்கு 'பை பை' சொல்லி அனுப்பி வை. விமலா சமைத்து வைத்துக் காத்திருப்பாள்!'' - ரமேஷ்.

''தங்கை சமையல் ஞாபகம் வந்துவிட்டதாக்கும்'' என்று சிணுங்கினாள் மாலதி.

''ஏன் சேகர்? நீதான் சாப்பிட்டுப் பார்த்திருக்கிறாயே? உன் வருங்கால மனைவியோட சமையல் எப்படி?'' என்று கண்ணைச் சிமிட்டிவிட்டு ஓர் ஆட்டோவைக் கைதட்டிக் கூப்பிட்டான் ரமேஷ்.

''பிரமாதமாக இருக்கும். நாளைக்கு விமலாவுக்கு லீவுதானே? வந்து பார்க்கிறேன் என்று சொல்லு, ரமேஷ்!'' என்றான் சேகர்.

''நாளைக்கு நீ வரமுடியாது. ஏன் தெரியுமா? மாலதி உனக்கு ஒரு வழக்கு கொண்டு வந்திருக்கா... ஒரு பெண்ணோட 'பிரா' கிடைச்சிருக்கு...அவளை யாரோ கடத்திக் கொண்டு போயிருக்கிறார்கள். நீ நாளைக்கு முழுக்க மகேந்திர மண்டபத்தடியிலேயே முகாம் போட்டு, போலீஸ் நாயை வைத்துக் கொண்டு மோப்பம் பிடிக்க வேண்டியிருக்கும்—வரட்டுமா, சேகர், வரட்டுமா மாலதி டியர்?''

ஆட்டோ பறந்தது.

மரியதாஸ்புரம். செவன்த் கிராஸ் தெரு.

பதினெட்டாம் நம்பர் வீட்டு வாசலில் ஆட்டோ நின்றது. இறங்கும்போதே ரமேஷுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

கதவு ஒருக்களித்திருந்தது. விமலா அப்படி ஒருநாளும் வைக்கவே மாட்டாள்.

பரபரப்புடன் கதவைத் தள்ளினான். உள்ளே ஏதோ தடுத்தது.

எட்டிப் பார்த்தான். விமலா இன்னும் ட்யூட்டிக்குப் போகும்போது கொண்டு போகிற பச்சை நிற பிளாஸ்டிக் கூடை. திரும்பி வரும்போது மார்க்கெட்டில் காய்கறி வாங்கிக் கொண்டு வருவாள்.

இன்றும் காய்கறி இருந்தது. விமலா?

உள்ளே நிலவிய மௌனம் ரமேஷின் வயிற்றை ஒரு முழு நிமிஷ நேரம் கலக்கியது.

(தொடரும்)

இவரைப் பற்றி....

# மேரியா பெரோன்

தென் அமெரிக்காவில் பிரேஸிலுக்கு அடுத்தபடியாக இரண்டாவது பெரிய நாடாகிய அர்ஜெண்டினாவின் அதிபர் ஸ்ரீமதி மேரியா பெரோன் அரசியல் நெருக்கடி காரணமாக 'விடுமுறை' எடுத்துக் கொள்ளக் கூடும் என்று செய்திகள் கூறுகின்றன. ஒரு நாட்டின் அதிபர் பதவியை வகிக்கும் முதல் பெண்மணி இவரேயாவார்.

மேரியா பெரோன் ஒரு நடுத்தரக் குடும்பத்தில் 1932ல் ஆறாவது குழந்தையாகப் பிறந்தவர். ஆறு வகுப்புக்கள் மட்டுமே முறையாகக் கல்வி பயின்றார். பின்னர் இசையும் நாட்டியமும் பயின்று, இருபது வயதுக்குமேல் ஒரு நாட்டியக் குழுவுடன் தென் அமெரிக்காவில் சுற்றுப் பயணம் செய்தார். 1956ல் பனாமா நகரத்தில் ஒரு நைட் கிளப்பில் பெரோனைச் சந்தித்தார். அவ்வமயம் பெரோன் நாடு கடத்தப்பட்டிருந்தார். பெரோனின் காரியதரிசியாகப் பணியாற்ற முன் வந்த மேரியா, 1961ல் பெரோனுடன் ஸ்பெயினுக்குச் சென்றபொழுது அவரை மணம் புரிந்து கொண்டார்.

ஜூன் 73ல் பெரோன் வெற்றிகரமாக நாடு திரும்பி அதிபரான பின்னர் மேரியா பொது நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ள ஆரம்பித்தார். அதுவரை காரியதரிசி போலவே இயங்கிய மேரியாவை 1973ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் அதிபர் பெரோன் துணை அதிபராக அறிவித்தபோது தமது நண்பர்கள், எதிரிகள் ஆகிய இரு தரப்பினரின் கோபத்துக்கும் உள்ளானார். எனினும், பெரோன் இறந்த பிறகு நாட்டின் தலைமைப் பதவியை ஆற்றலுள்ள ஓர் ஆண் அரசியல்வாதியிடம் ஒப்படைத்துவிட்டு மேரியா விலகிக் கொள்வார் என்று பொதுவாக எதிர்பார்க்கப்பட்டது. நடக்கவில்லை. மேரியாவே அதிபரானார்.

வலதுசாரி, இடதுசாரி ஆகிய இரு கோஷ்டியினரையும் தமக்கே உரிய அரசியல் திறமையோடு அரவணைத்து ஆட்சி செலுத்தி வந்தார், பெரோன். ஆனால் அவருக்குப் பிறகு பதவியேற்ற ஸ்ரீமதி பெரோன் எந்த அரசியல் கோஷ்டியின் ஆதரவையும் பெறவில்லை. தொழிற் சங்கங்கள்கூட, பெயரளவுக்குத்தான் ஸ்ரீமதி பெரோனுக்கு ஆதரவு நல்கின. மேரியா அதிபராகப் பதவியேற்றது முதலே நாட்டில் பயங்கரவாதிகளின் நடவடிக்கைகளும் அரசியல் அடிப்படையிலான பலாத்கார நிகழ்ச்சிகளும் மலிந்தன. பெரோன் இறந்த பின், நவம்பர் மாதத்துக்குள்ளாக நிகழ்ந்த அரசியல் படுகொலைகள் 150க்கு மேல் இருக்கும் எனக் கூறப்படுகிறது. ஃபெடரல் போலீஸின் தலைமை அதிகாரி ஆல்பர்ட்டோ வில்லார் கொலையுண்ட பிறகு, அரசாங்கம் நெருக்கடி நிலைமை நாட்டில் ஏற்பட்டிருப்பதாகப் பிரகடனம் செய்தது.



பண்டங்கள் பற்றாக்குறை, பரவலான வேலையில்லாத் திண்டாட்டம், இவை போதாவென்று முப்பது சதவிகிதப் பண வீக்கம் — இவ்வளவு பிரச்னைகளையும் சமாளிக்க வேண்டியிருந்தது, ஸ்ரீமதி பெரோனுக்கு. அரசியல் அனுபவம் அவ்வளவாகப் போதாது இவருக்கு. பொதுக்கூட்டங்களில் பேசும் பொழுது அடிக்கடி அழுது கண்ணீர் வடித்து உணர்ச்சி வசப்பட்டு விடுவார்!

ஸ்ரீமதி பெரோன் பதவியேற்ற பிறகு இரு முறை நாடு தழுவிய பொது வேலை நிறுத்தம் தலைகாட்டியுள்ளது. இரண்டாவது முறை நிகழ்ந்த நாற்பத்தெட்டு மணி நேரப் பொது வேலை நிறுத்தத்தின் விளைவாக அமைச்சரவை பதவியிலிருந்து விலக நேர்ந்தது. நூற்று ஐம்பது சதவிகிதம் உயர்ந்துள்ள ஊதிய உயர்வை ஐம்பது ஆகக் குறைக்குமாறு அரசு உத்தரவிட்டதுதான் இரண்டாவது முறையாக நிகழ்ந்த வேலை நிறுத்தத்துக்குக் காரணம். அர்ஜெண்டினாவின் நாணயம் 'பெஸோ'வின் மதிப்பைப் பொருளாதார அமைச்சர் ராட்ரிகோ சரிபாதியாகக் குறைத்ததும் (அதன் விளைவாக) விலைவாசி உயர்ந்ததும் பாட்டாளி வர்க்கத்தினரின் கோபத்தைத் தூண்டியிருக்கிறது. —பாணன்



## அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி-1975

**பரிசு விவரங்கள்:**

**மகள் மாலதி:** ஆயிரம் ரூபாய் முதல் பரிசு பெற்ற கதை
**ஸ்ரீமதி ருக்மிணி பார்த்தசாரதி,**
232, செக்டர் 19ஏ, சண்டிகர் - 160 018

**எப்பொழுதும் உன்னவர்கள்:** ஐந்நூறு ரூபாய் இரண்டாவது பரிசுக் கதை
**திரு வி. ராமமூர்த்தி, ஐ.ஏ.எஸ்.,**
'பாகீரதி', 285, முதல் அவென்யூ, இந்திரா நகர், சென்னை - 20

**ஒவ்வொரு கதைக்கும் இருநூற்றைம்பது ரூபாய் பரிசு பெற்ற இரு கதைகள்**

1. **பத்து வருஷப் பைத்தியம்:** திரு கே. விசுவநாதன் (அன்னம்)
வி. 221, காமராஜ் தெரு, திருநகர், மதுரை - 625 006
2. **"கழுகு":** ஸ்ரீமதி சிவசங்கரி, ஸ்பன் பைப் கம்பெனி, விழுப்புரம்



வி. அனுசூயா பாய்

# திறமைமிக்க திலகங்கள்

## . வி. அனுசூயாபாய் .



சொல்பவர்
**ஏ. இ. ஆதிசெட்டி**
விளையாட்டுப் பயிற்சியாளர்

சில வருடங்களுக்கு முன்பே குமாரி அனுசூயா பாயின் திறமையை, அவருக்கு விளையாட்டுத் துறையில் இருந்த ஆர்வத்தைக் கவனிக்க எனக்கு வாய்ப்பு ஏற்பட்டது. அப்போது சர்வகலாசாலை விளையாட்டு மைதானத்தின் ஒரு பகுதியில் நான் கல்லூரி மாணவர்களுக்குக் கிரிக்கெட் ஆட்டத்தில் பயிற்சி அளித்துக் கொண்டிருந்தேன். சற்றுத் தள்ளி, அப்போது கல்லூரி மாணவியாக இருந்த அனுசூயா பாய் 'தட்டு எறியும்' (Discus throw) பயிற்சியில் ஈடுபட்டிருந்தார்.

'இவருக்கு ஒரு நல்ல எதிர் காலம் இருக்கிறது' என்று நான் அப்போதே எண்ணினேன். அது பலித்ததோடல்லாமல், அவர் எங்கள் ரயில்வே இலாகாவிலே பணி புரியவும் வந்து சேர்ந்தார். சில அகில இந்திய 'ரிக்கார்டு'களை ஏற்படுத்தியவர் என்ற முறையில் ரயில்வே இலாக்காவே பெருமைப்படுகிறது.

இவருடைய விளையாட்டுத் துறை வளர்ச்சிக்கு அம்பத்தூரில் இவர் படித்த உயர் நிலைப்பள்ளி ஆரம்ப நாட்களில் நேரடியாக உதவாத போனாலும் மறைமுகமாக நிறையவே உதவியிருக்கிறது. அதாவது இவர் வீட்டுக்கும் பள்ளிக்கூடத்துக்குமிடையே இரண்டு மைல் தூரம். தோழிகளுடன் சேர்ந்து சீக்கிரம் பள்ளிக்கூடம் போய்ச் சேர வேண்டும் என்பதற்காக இவர் வேகமான நடையில் ஆரம்பித்து ஓட்டத்தில் முடிப்பாராம். அதே போல் மாலை வேளையில் இருட்டுவதற்கு முன் வீடு திரும்ப நடையில் ஓட்டத்தைக் கலப்பாராம். இந்தப் பயிற்சி அவருக்கு நல்ல தேகாப்பியாசத்தை அளித்ததோடு, ஓட்டப் பந்தயத்துக்கான பழக்கத்தையும் கொடுத்தது.

ஆனால் எட்டாம் வகுப்பில் படிக்கும்போதுதான் முதல் தடவையாக இவர் பள்ளிக்கூட விளையாட்டுப் போட்டிகளில் கலந்து கொண்டார். முதல் தடவையிலேயே முழு வெற்றி. முதல் பரிசுகள். பள்ளிக்கூடம் அதன் பிறகு தன் கவனத்தை இவர் பக்கம் திருப்பி, பல பள்ளிக்கூடங்கள் கலந்து கொள்ளும் விளையாட்டுப் போட்டிகளிலும் இவரைப் பங்குபெறச் செய்தது. இவருக்கு வெற்றி, பள்ளிக் கூடத்துக்குப் பெருமை.

ஆனால் இவர் கல்லூரியில் பட்டப் படிப்புக்குச் சேர்ந்த போது, இவருள் மறைந்திருந்த முழுத் திறமையையும் கண்டுபிடித்து, மெருகேற்றிப் பிரகாசிக்க வைத்த பெருமை ஸ்ரீமதி பியூலா மோஸஸ் என்பவரையே சேரும். அவர் மாவட்ட மாதர் அபிவிருத்திக் குழுவைச் சேர்ந்தவர். இவரை ஸ்ரீமதி மோஸஸ், நானூறு மீட்டர் ஓட்டப் பந்தயத்திலும் 'டிஸ்கஸ் துரோ' என்னும் தட்டு எறியும் பந்தயத்திலும் பழக்க ஆரம்பித்தார். ஒரு கிலோ கிராம் பளு உள்ள உலோகத் தட்டைச் சுழற்றி எவ்வளவு அதிக தூரம் எறிவது என்பது தான் தட்டெறிதல்.

அனுசூயாபாய் அப்போது ஓட்டப் பந்தயங்களைவிட, தட்டெறியும் அப்பியாசத்தில் அதிக ஆர்வம் காட்டியதால், இந்திய சர்வகலாசாலை மாணவர் குழுவில் ஒருவராக 1973ம் ஆண்டு, மாஸ்கோவுக்கு அகில உலக மாணவர்கள் விளையாட்டுப் போட்டியில் கலந்து கொள்ளச்சென்றார். அங்கே பரிசுகள் பெற வாய்ப்பு இல்லாதபோனாலும் மற்ற தேச இளைஞர்களின் அப்பியாசங்களைக் கவனித்து நல்ல அனுபவம் பெற முடிந்தது. லெனின் சடலத்தைப் பார்த்து ஏற்பட்ட வியப்பு இன்னும் இவர் மனத்தை விட்டு அகலவேயில்லை!

இதே 1973ல் ஆசிய விளையாட்டுக்கள் மணிலாவில் நடந்தபோது அதில் பங்கேற்கச் சென்றவர் அங்கே 'தட்டு எறிதல்' போட்டியில் நாலாவது இடத்தைப் பெற்றாலும், அவர் எறிந்த தூரம் நம் நாட்டைப் பொறுத்தவரையில் ஒரு 'தேசிய ரிக்கார்டு' ஆயிற்று.

திரு ஏ. இ. ஆதிசெட்டி



■ சென்னை [illegible] பாரதி கலைக்கழகம் ஸ்ரீ சுராஜ் போன்ற தமிழ் அன்பர்களின் ஆர்வத்தில் தொடக்கம் பெற்றுக் கடந்த இருபத்து நான்கு ஆண்டுகளாக இயங்கி வருகிறது. அண்மையில் ஆண்டு விழாக் கொண்டாடிய போது, அது கவிஞர் மதி அவர்களுக்குக் கவிமாமணி என்னும் பட்டம் சூட்டி மகிழ்ந்தது. அப் பட்டத்தை வழங்கிப் பொன்னுடை போர்த்திக் கௌரவிப் பவர் நீதிபதி ஸ்ரீ கிருஷ்ண ஸ்வாமி ரெட்டியார்.

■ பிரபல வயலின் வித்வானும் சத்குரு தியாகப் பிரம்மத்தின் சிஷ்ய பரம்பரையில் தோன்றியவரு மான லால்குடி ஸ்ரீ ஆர். எஸ். கோபாலய்யர் அவர் களைத் திருச்சி பைன் ஆர்ட்ஸ் சபை தனது எட்டா வது ஆண்டு விழாவில் கௌரவிக்கும் பெருமை யைப் பெற்றது. இந்தப் பாராட்டு விழாவுக்குச் செம்மங்குடி ஸ்ரீ ஸ்ரீநிவாச அய்யர் தலைமை வகித்துச் சிறப்பித்தார்.

1974ல் கொழும்பு நகரில் நடந்த இந்தியா-ஸ்ரீலங்கா விளையாட்டுப் போட்டிகளில் இரண்டு தங்கப் பதக்கங்கள் இவரைத் தேடி வந்தன. ஒரு பதக்கம் தட்டு எறிவதற்காக. மற்றொரு பதக்கம் குண்டு (**Shot put**) எறி வதற்காக.

இலங்கைக்குப் போய்த் திரும்பிய கையோடு டெஹ்ரானில் நடந்த ஆசிய விளை யாட்டுப் போட்டிகளில் கலந்து கொண்டார். இங்கும் தட்டு எறிவதில் ஒரு தேசிய ரிக்கார்ட். அதுவரையில் அந்தக் கிலோகிராம் நிறையுள்ள தட்டை எந்தப் பெண்ணும் 45.96 மீட்டர் தூரம் எறிந்ததில்லை. பாராட் டப்பட்ட ரிக்கார்ட்.

டெஹ்ரானிலிருந்து திரும்பிய பிறகு, பாரதத்தில் நடத்தப்பட்ட ஒரு விளையாட்டு முகாமில் இவர் நூறுமீட்டர் ஓட்டப் பந்தயத் தில் ஆர்வம் காட்டியது அதிகாரிகளால் கவனிக்கப்பட்டது. அவ்வளவுதான்!

அடுத்தபடியாகத் தென்கொரியாவில் உள்ள சியோல் நகரில் நடக்கவிருந்த தேசிய விளை யாட்டுப் போட்டிகளில் கலந்துகொள்ள அனுப்பப்பட்டார். இப்போது தட்டெறிபவ ராக அனுப்பப்படவில்லை. நூறு மீட்டர் ஓட்டப் பந்தயத்தில் கலந்து கொள்பவராக. அங்கு இரண்டாவது இடமும் அனுபவ மும் கிடைத்தன.

தாயகம் திரும்பும்போது பிலிப்பைன்ஸ் நாட்டிலுள்ள [illegible] நகரில் நடந்த தேசியப் போட்டிகளில் கலந்து கொண்டபோது, பதினைந்து வருடங்களாக மாற்றப்படாமல் இருந்த தேசிய ரிக்கார்டை முறியடித்தார். நூறு மீட்டர் தூரத்தை 12.1 விநாடிகளில் ஓடி வந்தார். இதற்குமுன் 1961ம் ஆண்டில் பதியப்பட்ட 12.2 விநாடி ரிக்கார்டை, 1974ல் மாற்றிய பெருமை இவரைச் சேரும்.

இந்தப் பந்தயத்தில் கலந்து கொண்டு இவர் ஓடி முடித்ததும், பலர் வந்து இந்தச் சாதனைக்காகப் பாராட்டியபோது இவரால் நம்பவே முடியவில்லையாம்! நம்பியபோது ஏற்பட்ட பரவச உணர்ச்சியை இவரால் மறக்கவும் முடியவில்லையாம்!

ரயில்வே இலாக்காவில் இவர் 1973ம் ஆண்டிலேயே சேர்ந்துவிட்டார். இப்போது மூன்று கிலோமீட்டர் தூர ஓட்டப் போட்டி யான 'க்ராஸ் கண்ட்ரி ரேஸ்' பந்தயத்துக்குத் தம்மைத் தினம் பழக்கிக் கொண்டிருக் கிறார். தினசரி அப்பியாசம் பெறுகிறார். பொறுமை, மனோதிடம், பலம், மூன்றை யும் ஒருங்கே இணைத்துச் செயல்படும் திறமை இவரிடம் உண்டு.

கல்லூரி நாட்களில் இவரைக் 'காட்டு ராணி' என்றுதான் சிநேகிதிகள் கூப்பிடு வார்களாம். இப்போது அவர், நாட்டின் பெண் குலத்துக்கே பெருமை தேடித் தரும் விளையாட்டு ராணியாகத் திகழும் வாய்ப்பைக் கொஞ்சம் கொஞ்சமாகச் சேர்த்துக் கொண்டு வருகிறார். இவர் ஒரு ரசாயனப் பட்டதாரி.

**கேட்டு எழுதியவர்: கோமதி ஸ்வாமிநாதன்**



சத்யம் — தர்மம் — சாந்தி — பிரேமை

# நான் வணங்கும் மனித தெய்வம்

நான் வணங்கும் மனித தெய்வம், ஸ்ரீ பகவான் சத்ய சாயி பாபா அவர்களே. நான் அவரிடம் ஈடுபாடு கொண்ட முதல் காரணம் அவர் கடைப்பிடிக்கச் சொல்லும் சத்யம் — தர்மம் — சாந்தி — பிரேமை ஆகியன. ஆரம்பத்தில் நமக்கு அசாத்தியமாகத் தோன்றினாலும், போகப் போகச் சிறிதளவாவது நம் மனத்தில் படிய ஆரம்பித்துவிடுகிறது.

அவர் இருக்கும் இடத்துக்கு நாம் செல்லும்போது ஆயிரக்கணக்கான ஜனங்கள் அவ்விடம் கூடி இருந்தாலும் ஒரு சிறிய குழந்தை கூட அழாமல் வெகு அமைதியுடன் பஜனை செய்து கொண்டு தங்களை மறந்து தியானத்தில் இருக்கிறார்கள். அவ்விடத்தில் ஏழை, பணக்காரர்கள், ஜாதி, மதம் என்ற வித்தியாசங்களே கிடையாது. வியாதியஸ்தர்களிடமும், ஊனமுற்ற பெரியவர்களிடமும், சிறியவர்களிடம் அவர் தாமே வந்து கையில் விபூதி வரவழைத்துக் கொடுத்து வியாதிகளைத் தீர்த்து வைக்கிறார்.

என் தகப்பனார் பத்து நாள் ஜுரத்துக்குப் பிறகு வலது கால் சற்று இழுத்தாற்போல் ஆகி நடப்பது மிகவும் சிரமமாகிவிட்டது. அப்படி மீறி நடந்தால் வலி உயிர் போவது போல் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார். எக்ஸ்ரே எடுத்தும் பலவித மருந்துகள் சாப்பிட்டும், நாட்டு வைத்தியங்கள், தைலங்கள், லேகியம் எல்லாம் சாப்பிட்டும், பயனில்லை. என்ன வியாதி என்று கண்டுபிடிக்கவே முடியாமல் இருந்தது. அந்தச் சமயம் பெங்களூரில் ஒயிட் ஃபீல்ட் என்ற இடத்தில் ஸ்ரீ பாபா இருந்தார். மிகவும் சிரமப்பட்டு என் தகப்பனாரை அங்கு அழைத்துச் சென்றோம். என் தகப்பனார் அது வரையில் ஸ்ரீ பாபா அவர்களைத் தரிசனம் செய்தது இல்லை. பிருந்தாவனம் என்ற பெயர் கொண்ட அந்த இடத்தில் நாங்கள் யாவரும் அமர்ந்து கொண்டோம். சரியாக மாலை நாலரை மணிக்கு ஸ்ரீ பாபா வந்தார். அனைவருக்கும் தரிசனம் கொடுத்துக் கொண்டே வந்தவர், என் தகப்பனாரிடம் வந்தபோது 'டக்' என்று நின்று விட்டார். என் தகப்பனாரைக் கட்டித் தழுவி விபூதி வரவழைத்து நெற்றியிலும், உடம்பிலும் பூசித் தட்டிக் கொடுத்துவிட்டுப் போனார். அவ்வளவுதான்; ஒரு வாரத்தில் கால் படிப்படியாகக் குணமாகி முற்றிலும் சரியாகி விட்டது. டாக்டர்களே ஆச்சரியப்பட்டார்கள். மற்றொரு முக்கியமான விஷயம். பாபாவிடம் போகும்போது நமக்கு எந்தவிதமான பணச் செலவும் கிடையாது. உண்டியலோ, நிதி திரட்டுவதோ எதுவும் கிடையாது. அவருக்குப் பிடிக்கவும் பிடிக்காது. அவர் பேரைச் சொல்லிக் கொண்டு யாராவது வந்தால்கூட எதுவும் தரவேண்டாம் என்று எச்சரிக்கை விடுக்கிறார். அவருக்குப் பிடித்தமான, அமைதியான பஜனைகள் செய்து வருகிறேன். பஜனையில் தியானம் முக்கியம்.

மிகவும் கஷ்டப்படும் ஏழைகளுக்குப் பழைய துணிமணிகள் எல்லார் வீட்டிலும் சேகரித்து அவர்களுக்குக் கொடுத்து உதவச் சொல்கிறார். ஏழைகளுக்கு இலவச வைத்திய உதவி கிடைக்க உதவச் சொல்கிறார். குற்றம் செய்துவிட்டு ஜெயிலில் மனம் வாடும் கைதிகளுக்கு வாரம் ஒரு முறை ஜெயிலுக்குச் சென்று பஜனைகள் செய்யச் சொல்கிறார். ஆஸ்பத்திரிகளுக்குப் போய் வியாதிகளால் கஷ்டப்பட்டுக் கொண்டிருப்பவர்களுக்கு விபூதிப் பொட்டலங்கள் கொடுத்துத் தன்னம்பிக்கை ஏற்பட உதவச் சொல்கிறார். அவர் பக்தர்களுக்கு இடும் அன்புக் கட்டளைகள் இவையே. இவை ஒவ்வோர் ஊரிலும் நடந்து வருகின்றன. கடவுள் நம்பிக்கை இல்லாதவர்கள்கூட அவரிடம் போய் வந்தபிறகு தீவிர பக்தர்களாக மாறி வருவதைப் பார்த்திருக்கிறேன். ''சத்யம் — தர்மம் — சாந்தி — பிரேமை'' என்ற பாபாவின் ஆக்ஞையைச் சிரமேற் கொண்டு ஒவ்வொருவரும் நடந்தால் லோக க்ஷேமம் ஏற்படும்.

— நாகலக்ஷ்மி



# பொன்னியின்

## 53. புது மலர்கள்

**பொன்னிற மலர்கள் பூத்துக் குலுங்கிப்
புன்னகை செய்தன புதுமணம் வீசின**

"இதுவல்லவோ சுயசரிதம்!" என்று கல்கி வியந்தார், "நினைவு அலைகள்" என்ற டாக்டர் டி. எஸ். எஸ். ராஜனின் புத்தகத்துக்கான முன்னுரையில். 1947ல் வெளியான நூல் அது.

அதே முன்னுரையில் கல்கி மேலும் சொல்கிறார்:

தமிழில் எழுதத் தங்களுக்கு நன்றாய் வராது என்று எண்ணிக் கொண்டிருந்த சில பெரியோர்களையும் தமிழில் எழுதுவதற்கு ஆர்வமோ தூண்டுதலோ இல்லாமலிருந்த இன்னும் சில பெரியோர்களையும் தமிழில் எழுதும்படி செய்த பாக்கியம் எனக்குக் கிடைத்திருக்கிறது. இவர்களில் ராஜாஜி, எஸ்.வி.வி. மகாகனம் சாஸ்திரி ஆகியவர்களோடு டாக்டர் ராஜன் அவர்களையும் சேர்க்க வேண்டும்.

1934ல் காந்தி மகாத்மா தமிழ் நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்தபோது, டாக்டர் ராஜன் மகாத்மாவின் மொழிபெயர்ப்பாளராகப் பிரயாணம் செய்து வந்தார். அந்தப் பிரயாண அனுபவங்களைக் கட்டுரைகளாக எழுதும்படி டாக்டர் அவர்களைக் கேட்டுக் கொண்டேன். டாக்டரும் மனமுவந்து எழுதினார். அந்தக் கட்டுரைகள் தமிழ்நாட்டின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டன.

ஹரிஜன ஆலயப் பிரவேசப் பிரசாரத்துக்காகக் காந்திஜி மேற்கொண்ட அந்தப் பயணத்தில், டாக்டர் ராஜனின் ஸ்தானத்தில் கல்கி இருந்திருக்க வேண்டியது. அவரேதான் மகாத்மாவின் மொழிபெயர்ப்பாளராய்ச் செல்வதென்று ஏற்பாடாகி, அதற்கென அவர் ராஜா எடுத்துக் கொண்டு, ஆயத்தமாயும், ஆவலுடனும் இருந்தார். ஆனால் கடைசி நேரத்தில் அந்த ஏற்பாட்டை டாக்டர் ராஜனே ரத்து செய்து, தாமே அண்ணலின் மொழிபெயர்ப்பாளராய் இருக்க நேர்ந்தது. இந்த விவரங்கள், ராஜாஜியின் குமாரர் ஸி. ஆர். நரசிம்மன் கொடுத்து உதவிய இரண்டு கடிதங்களிலிருந்து புலனாகின்றன. அப்போது கோயமுத்தூர் சிறையிலிருந்த ராஜாஜிக்கு எழுதப்பட்ட அக்கடிதங்களில் முதலாவது கல்கியின் கடிதம்.

(மாம்பலம், 7–1–34) ஒன்றரை மாத காலத்துக்கு விகடனிலிருந்து விடுதலை பெற்

---

1. லேவிகா. 2. டி. எஸ். எஸ். ராஜன். 3. பி. ஸ்ரீ. 4. பி. எஸ். ராமையா. 5. எல்லார்வி. 6. ஆர். ஏ. பத்மநாபன். 7. ஆர். கே. நாராயணன். 8. நாடோடி. 9. (கதிர்) வெங்கட்ராமன். 10. ஆர். பத்மா.





















# புதல்வர்

சுந்தா

திருக்கிறேன். பிப்ரவரி 15ந் தேதியுடன் விவு முடிகிறது.

காந்திஜியின் தமிழ்நாட்டுச் சுற்றுப் பிரயாணத்தில் அவருடன் செல்லலாமென்று எண்ணியிருக்கிறேன். ஆனால் அதிகமாய்ப் பயன்படுவேன் என்று தோன்றவில்லை. எல்லா இடங்களிலும் கணக்கற்ற ஜனங்கள் கூடப் போகிறார்கள். காந்திஜியின் தரிசனம்தான் சாத்தியம். பிரசங்கம் என்று பெயருக்கு நடந்தால் பெரிய காரியம். மொழிபெயர்ப்பு சாத்தியமென்றே நினைக்கவில்லை. ஆயினும் காந்திஜியுடன் செல்வது ஒரு பெரிய அநுபவமாகவே இருக்கும்...

இரண்டாவது, லக்ஷ்மி தேவதாஸ் காந்தி எழுதிய கடிதம் :

(சென்னை, 22–1–34) ஆனந்த விகடனுக்கு விரோதமாய் இருப்பவர்கள், ஆனந்த விகடன் போட்டிப் பந்தயம், பரிசு முதலிய "நியாய விரோதமான" காரியங்களில் ஈடுபட்டிருப்பதால், அதைச் சேர்ந்த ஒருவர் பாபுஜியுடன், அவர் பிரசங்கங்களை மொழிபெயர்க்கப் போகக் கூடாது என்று, பலமாகக் கிளர்ச்சி செய்ததன் பேரில், டாக்டர் ராஜன், கிருஷ்ணமூர்த்தியை வரவேண்டாம் என்று தந்தி கொடுத்து விட்டார். ஆகையால் கிருஷ்ணமூர்த்தி பாபுவுடன் தமிழ் நாட்டுப் பிரயாணத்தில் கூடப்போவது நின்றுவிட்டது.

விகடனின் போட்டிப் பந்தயங்கள் சம்பந்தமாய்க் கல்கியின் மனநிலை என்ன என்பதையும், எந்த நோக்கத்துடன் அவர் அப்பத்திரிகையில் வேலை பார்த்து வந்தார் என்பதையும், "இலக்கிய விவாகம்" என்ற அத்தியாயத்தில் பார்த்தோம். அவர் மகாத்மாவுடன் போகக்கூடாது என்பதாகக் 'கிளர்ச்சி' செய்தவர்கள் யார் யாராய் இருந்த போதிலும், அவர்கள் நியாய உணர்ச்சியினால் தூண்டப்பட்டவர்கள் அல்லர். "லட்சக் கணக்கான மக்களின் முன்னிலையில், இந்தக் கல்கி, மகாத்மாவின் பக்கத்தில் மேடைகளில் நிற்கவாவது, அவருடைய உரைகளைத் தமிழாக்கம் செய்து பெருமை அடைவதாவது!" என்ற பொறாமையால் தூண்டப்பட்டவர்கள்தான். அவர்களுடைய அநியாயக் கோரிக்கையினால் டாக்டர் ராஜன் கலக்கமுற்றுக் கல்கியைத் தடை செய்தது, வழக்கமான அவருடைய தைரியப் போக்குக்கு முரணாய் இருக்கிறது.

எவ்வளவு அரிதும் பெரிதுமான வாய்ப்பைக் கல்கி இழக்க நேர்ந்தது! அதனால் எவ்வளவு ஏமாற்றமும் வேத




11. கோபு. 12. சுகப்ரியை. 13. துமிலன். 14. குமுதினி. 15. த. நா. குமாரசாமி. 16. (ரஸி) ராமலிங்கம். (படம் கிடைக்கவில்லை.) 17. கி. கிருஷ்ணசாமி (மதுரம்). 18. தேவன். 19. பரதன்.










போட்டோ நெகடிவ்களைப் பத்திரமாகப் பாதுகாக்க ஒரு வழி. ஆல்பத்தில் ஃபோட்டோ கார்னர்களில் முதலில் நெகடிவ்களை செருகி வைத்துவிட்டு, அதன் மேல் புகைப்படங்களைச் செருகி வைத்தால் நெகடிவ்கள் பத்திரமாக இருப்பதோடு படத்துக்குரிய நெகடிவையும் பிறகு அடையாளம் கண்டுகொள்ள வசதியாக இருக்கும். -பி. எஸ்.

---

ளையும் அடைந்திருப்பார்! ஆனாலும் அவற்றைத் தம்முள்ளே அடக்கிக்கொண்டார்; மகாத்மாவின் அந்த மகத்தான பிரயாணத்தின் விவரங்களை, தாம் பதிப்பிக்கும் பத்திரிகையில் பதித்து வாசகர்கள் பயன்பெறச் செய்ய வேண்டும் என்ற எண்ணத்துடன், அவற்றை எழுதும்படி டாக்டர் ராஜனைக் கேட்டுக்கொண்டார். ஒரு பெருமையைக் கல்கி இழந்தாலும், தம்மை எழுத்தாளர் உலகுக்கு அனுப்பிய டாக்டர் ராஜனைத் தமிழிலே எழுத வைத்து இலக்கியப் புகழ் அடையச் செய்த பெருமையை லாபமாகக் கொண்டார். இந்தப் பெருமை டாக்டர் ராஜனின் ''நினைவு அலைகள்'' நூலுக்குக் கல்கி எழுதிய முன்னுரையில் தொனிக்கிறது.

டாக்டர் ராஜனைப் போலவே, வயதிலும் வேறு சில வகைகளிலும் தம்மை விடப் பெரியவரான இன்னொருவரின் நூலுக்கும் 1938லேயே முன்னுரை எழுதும் பெருமையைக் கல்கி அடைந்தார். — பி. ஸ்ரீ. ஆச்சாரியாரின் ''திவ்யப் பிரபந்த ஸாரம்''. அதிலிருந்து ஒரு பகுதி:

இந்தப் புத்தகத்தில் தொகுத்து வெளியிட்டிருக்கும் திவ்யப் பிரபந்தக் கட்டுரைகள் ஆனந்தவிகடனில் பிரசுரமாகிக் கொண்டு வந்தபோது, ஒரு நண்பர், ''இந்த ஆழ்வார் கட்டுரைகளை யாராவது படிக்கிறார்களா?'' என்று கேட்டார். ''படிக்காமற் போனால் ஆழ்வார்களுக்கு ஒன்றும் நஷ்டமில்லை'' என்று பதில் சொன்னேன்...

தமிழ்க் கவிதையின் பண்பை எனக்கு உணர்த்தி அதன் இன்பத்தை நன்கு அனுபவிக்கும்படி செய்தவர்கள் இருவர் உண்டு. ஒருவர்தான் டி. கே. சி.... இன்னொருவர் பி. ஸ்ரீ. தமது இயற்கையான கவிதை உணர்ச்சியுடனே டி. கே. சி.யின் கூட்டுறவினால் லாபம் அடைந்தவர்.

•

டி. கே. சி.யைப் போலவே பி.ஸ்ரீயும் பொருனை தந்த செல்வர்களிலே ஒருவர். விட்டலபுரம் கிராமத்தில் இலக்கியச் செல்வம் படைத்த குடும்பம் ஒன்றில் பிறந்து, அந்தச் செல்வத்தை அனுபவித்துக் கொண்டே வளர்ந்தவர். அவர் முதலில் வகித்தது உளவறியும் போலீஸ் உத்தியோகம். அரவிந்தரின் நடவடிக்கைகளை உளவறியும் வேலையில் ஈடுபட்டிருக்கையில் அவருடைய உள்ளத்தில் மாறுதல் உண்டான காரணத்தால் உத்தியோகத்தை உதறித் தள்ளிவிட்டு, தேசிய உணர்ச்சியையும் இலக்கிய ஆர்வத்தையும் ஊட்டும் எழுத்தாளராய்ப் பரிணமித்தார்.

கல்கி எழுத வைத்த எழுத்தாளர்களில் ஒருவர் அல்லர்தான் பி.ஸ்ரீ. ஆனாலும், கல்கியின் மூலம் மிகப் பெரும் அளவில் எழுதுவதற்கு வாய்ப்பைப் பெற்றவர் அவர். கல்கி ஆனந்த விகடனில் இருந்த காலத்தில், அவருக்கு அடுத்தாற்போல் அதில் அதிக இடம் பெற்றவர் பி.ஸ்ரீ.யே. அவருடைய இலக்கியப் பூஞ்சோலைக் கட்டுரைகள், சித்திர விளக்கங்கள், ''சிவநேசச் செல்வர்கள்'', ''கம்ப சித்திரங்கள்'' முதலியன நெடுந்தொடர்களாய் அதில் வெளியாயின.

பி. ஸ்ரீ.யின் கட்டுரைகள் விகடனின் பொதுவான பொருளடக்கத்துடன் பொருந்தாமல் கனமாய் இருந்தன. ஆயினும், தமிழ் இலக்கியத்தின் அருமை பெருமைகளை வாசகர்களுக்கு உணர்த்த வேண்டும் என்ற நோக்கத்துடன், அவற்றைக் கல்கி, ஆட்சேபணைகளுக்கு இடையே உறுதிப் பற்றுடனும் இடையறாமலும் வெளியிட்டு வந்தார்.

தமிழ் இலக்கியச் செல்வத்துடன் வங்க இலக்கியச் செல்வத்தை வழங்கும் வாய்ப்பையும் அந்தக் காலத்திலேயே ஏற்படுத்திக் கொண்டார் கல்கி. எப்படி என்பது சுவையான விவரம்—

வேறொரு பத்திரிகையில் ''கன்யாகுமரி'' என்ற சிறுகதையைப் படித்து மகிழ்ந்த கல்கி, அதை எழுதிய த. நா. குமாரஸ்வாமியைத் தம்மைச் சந்திக்கும்படி கடிதம் மூலம் அழைத்தார். அதன் பேரில் வந்த இளைஞர் யார் என்ன என்ற விவரங்களைக் கேட்டறிந்ததும் பெரிதும் வியப்புற்றார். குமாரஸ்வாமியின் தந்தையார் தண்டலம் நாராயண சாஸ்திரியார்; சம்ஸ்கிருத விற்பன்னர்; ஆதிசங்கரரின் வாழ்க்கை வரலாற்றை ஆங்கிலத்தில் ''தி ஏஜ் ஆஃப் சங்கரா'' என்ற மகுடத்துடன் எழுதி வெளியிட்டவர். தமிழில் முன்னோடியான, ''போஜ சரித்திரம்'' நாவலை இயற்றியவர். தந்தைக்கு ஏற்ற தனயனாகக் குமாரஸ்வாமி, சம்ஸ்கிருதத்தை நன்கு அறிந்திருந்ததுடன், வங்க மொழியையும் தாமாகவே கற்றுத் தேர்ந்திருந்தார்; சாந்திநிகேதன் சென்று, கவி தாகூரைத் தரிசித்து உரையாடும் பாக்கியத்தைப் பெற்றிருந்தார்.

''பலே! பேஷ்!'' என்ற பாராட்டுக்களுடன் அந்த விவரங்களைக் கேட்ட பின்னர், கல்கி, தமது பத்திரிகைக்கும் கதைகள் எழுதி அனுப்பும்படி அந்த இளைஞரைக் கேட்டுக் கொண்டார். அதற்கு இணங்க, த. நா. குமாரஸ்வாமி அடுத்தடுத்து அனுப்பிய ''ராமராயன் கோட்டை'', ''ஸ்ரீசைலம்'' முதலியன அடுத்த எடுப்பிலேயே புகழ் கூடிய கதைகளாயின. அவருடைய வங்கமொழித் தேர்ச்சியைக் கல்கி பயன் படுத்திக் கொண்டு, பங்கிம் சந்திர சாட்டர்ஜியின் (எட்டு அத்தியாயங்களுடன் நின்று போன) குறை நாவல் ஒன்றை நிறைசெய்து கொடுக்கும்படி கேட்டுக்கொண்டார். அதன்படி, இருபத்து மூன்று அத்தியாயங்கள் சேர்த்துக் குமாரஸ்வாமி எழுதிக் கொடுத்த ''மாதங்கினி'' நாவலை விகடனில் தொடராக வெளியிட்டார். அதற்குப் பிறகு தாகூரின் நாவல் ஒன்றைத் தழுவி எழுதிக் கொடுக்கச் சொன்னார் கல்கி. ''பூந்தோட்டம்'' என்ற அந்த நாவல் பல இதழ்களில் தொடர்ந்து வந்தது.

''குமுதினி'' என்ற தாகூரின் இன்னொரு நாவலின் தமிழாக்கத்தையும் அந்த நாட்களில் கல்கி வெளியிட்டார். அதை மொழிபெயர்த்தவரும் ''குமுதினி'' — அப்படிப் புனைபெயர் கொண்ட ஸ்ரீரங்கம் ரங்கநாயகி தாத்தம். தமிழுக்குப் புதிதான ''எஸ்ஸே'' வடிவில் அவர் எழுதிய பல கட்டுரைகளையும் கல்கி பிரசுரித்தார். அந்தக் கட்டுரைகள் பின்னர் புத்தக வடிவில் வந்த போது, அதன் முன்னுரையில் கல்கி, ''தமிழ் வசனத்தைக் கையாளும் லாகவம் ஒருபுறம் இருக்க, சாதாரண சின்ன விஷயங்களைப் பற்றி, சில்லறைச் சங்கதிகளைப் பற்றி இவ்வளவு ரஸமாக எப்படி எழுத முடிகிறது!'' என்று வியந்தார்.

கல்கி ஊக்கம் ஊட்டிய மற்றொரு பெண் எழுத்தாளர் ஆர். பத்மா. அவர் அனுப்பிய முதல் கட்டுரை நன்றாய் விஷயம் அமைந்ததாயும், ஆனால் எழுத்துப் பிழை மலிந்ததாயும் இருந்தது. அதைக் கல்கி திருத்தி வெளியிட்டுவிட்டு ''பிழையின்றி எழுதப் பழகிக் கொண்டால் தாங்கள் சிறந்த கட்டுரையாளர் ஆகக் கூடும்'' என்று நம்பிக்கை தெரிவித்து அவருக்குக் கடிதம் எழுதினார். அந்த நம்பிக்கை வீண் போகவில்லை. மேலும் மேலும் சிறந்த கதை கட்டுரைகளை ஆர். பத்மா எழுதி, 1937ம் ஆண்டில் பாரதி தங்கப் பதக்கப் பரிசுக்கு உரித்தானார்.

குமுதினியும் பத்மாவும் ஏற்கெனவே குறிப்பிட்ட குகப்ரியை, ஸேவிகா ஆகியோரும் நவீனத் தமிழில் பின்னர் எழுதப்போகும் இலக்கியச் செல்விகளை வரவேற்கும் ''ஆரத்திப் பெண்டுகள்'' போல் அமைந்தார்கள்.

எழுத்தாளர்களைக் கடிதம் மூலம் பாராட்டுவதோடு, தமது ''உபயகுசலோபரி'' பத்தியிலும் அவ்வப்போது கல்கி பாராட்டி எழுதி, அதை வாசகர்களுடன் பகிர்ந்து கொள்வதுண்டு. 29–4–34 விகடன் இதழில் அப்போது தம்முடன் இருந்த துணை ஆசிரியர்களைப் பற்றியே முதல் முதலாகப் பாராட்டுக் குறிப்புக்கள் எழுதினார்:

தமிலன் — நாம் எல்லோரும் அற்பம் என்று தள்ளிவிடும் சின்னஞ் சிறு விஷயங்களிலிருந்து அவர் இவ்வளவு நகைச்சுவையை எப்படித் தேடிப் பிடித்துக் கொண்டு வருகிறார் என்பது மிக்க ஆச்சரியமாகும். சின்னஞ் சிறு விஷயங்களில் உள்ள விசேஷ அம்சங்களைப் பிழிந்தெடுத்து நாம் சற்றும் எதிர்பாராத முறையில் எடுத்துக் கூறி நம்மைத் திடுக்கிடச் செய்வதுதான் அவர் கையாளும் வித்தை.

ரூனி — எவ்வளவு சரளமான நடை! ஆனால் எவ்வளவு பொருள் பொதிந்தது. அநாவசியமான ஒரு வார்த்தைகூட ''ரூனி''யின் எழுத்தில் பார்க்க முடியாது.

(1936ல் விகடன் முதலாவதாக நடத்திய சிறுகதைப் போட்டியில் ''ஊமைச்சி காதல்'' என்ற கதைக்கு முதல் பரிசு பெற்று, அதைத் தொடர்ந்து வேலைக்கு அமர்ந்தவர் ரூனி— எம். ஜெ. இராமலிங்கம். அதே போட்டியில் ''மலரும் மணமும்'' என்ற கதைக்காக, பின்னர் பெரும் புகழ் ஈட்டிய பீ. எஸ். ராமையாவுக்கு இரண்டாவது பரிசு கிடைத்தது என்பது குறிப்பிடத் தக்கது.)



தேவன் -- ஒரே கட்டுரையில், ஒரே நாளில், தமிழ் நாடெங்கும் பிரசித்தமாகிவிட்டார். அல்லது அவருடைய மருமான் ''மாஸ்டர் ராஜாமணி'' அவரைப் பிரசித்தமாக்கிவிட்டான் என்று சொல்லலாம். குழந்தைகளின் அற்ப சந்தோஷங்களையும் துக்கங்களையும் பற்றி மட்டுமல்ல; வயதான மனிதர்களுடைய மகா அற்ப சுக துக்கங்களைப் பற்றியும் அவ்வளவு குதூகலத்துடன் எழுதக் கூடியவர் தாம் என்று தேவன் காட்டிக்கொண்டு வருகிறார்.

''தேவன்'' என்ற புனைபெயரை ஆர். மகாதேவனுக்குக் கல்கியேதான் சூட்டினார். அந்தப் புனைபெயரின் புகழ், ''மாஸ்டர் ராஜாமணி'' தொடர் கட்டுரைகளில் ஆரம்பமாகி, ''துப்பறியும் சாம்பு'' கதைகளில் பரவிப் பின்னர், மேலும் மேலும் பெருகிற்று. ''பயந்த சுபாவம்'' என வர்ணிக்கும்படியாக அடக்கமான குணம் கொண்டிருந்த தேவன் கல்கிக்கு உதவி ஆசிரியராக மட்டுமின்றி, அவருடைய அலுவலகக் காரியங்களையெல்லாம் பொறுப்புடன் கவனித்துக் கொள்ளும் செயலாளராகவும் இருந்தார்.

தேவனைக் கல்கி விகடனில் சேர்த்துக் கொண்ட விதம், எப்படி அவர் திறமைசாலிகளை வலுவிலேயே தேடிக் கொள்வதுண்டு என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டாகும். தேவனின் முதல் கட்டுரையைப் பிரசுரிக்க ஏற்றுக் கொண்டதுமே அவருக்கு உற்சாகம் ஊட்டும் விதத்தில் கல்கி ஒரு கடிதம் எழுதினார். அதற்குச் சில மாதங்களுக்குப் பிறகு பி. ஏ. பட்டமளிப்பு விழாவுக்காகச் சென்னைக்கு வந்த தேவன், விகடன் அலுவலகத்தில் கல்கியைக் கண்டார். மறுநாளே, அவருடைய சென்னை விலாசத்துக்குக் கல்கியின் கடிதம் ஒன்று சென்றது — விகடனில் பணியாற்ற விருப்பமா என்பதாகக் கேட்டு.

''ஒன்பது வருஷங்கள் நான் கல்கி அவர்களின் அருகிலே இருந்து பணி செய்யும் பெருமை பெற்றேன்'' என்று கல்கிக்கு அஞ்சலி செய்து எழுதிய கட்டுரை ஒன்றில் தேவன் உணர்ச்சியுடன் கூறினார். அதே கட்டுரையில், தாம் விகடனில் சேர்ந்த புதிதில் தாம் எழுதிய ஒன்றைக் கல்கி பாராட்டிய விதத்தையும் தேவன் சொல்லியிருக்கிறார்:

...கல்கியிடம் என் பக்தி ஒருபுறமிருக்க, ஒரு பயமும் உண்டு. 'இத்தனை பெரிய எழுத்தாளரிடம் எப்படி நாம் எழுதுவதை வைப்பது?' என்று நான் அஞ்சியிருக்கிறேன். ஒரு சமயம் இப்படித்தான் பயந்துகொண்டு ''எங்கள் ஊர்ச் செய்திகள்'' என்ற ஒரு கட்டுரையை வைத்துவிட்டு, கீழே அச்சாபீசுக்குள் அடைக்கலம் புகுந்து கொண்டேன்.

சற்று நேரத்துக்கெல்லாம் கல்கி கூப்பிட்டார். போனேன். என் கட்டுரையைக் கையில் சுருட்டி வைத்துக் கொண்டு, ''இதை நீயா எழுதினே?'' என்றார். ''ஆமாம்'' என்று சொன்னேன். ''நீ போகலாம்!'' என்றார்.

சிறிது நேரத்துக்கெல்லாம் கல்கி ஒரு உபயகுசலோபரி எழுதிக் கொண்டிருந்தார். ஷீட் ஷீட்டாக அச்சகத்துக்கு வந்துகொண்டிருந்தது. நான் படித்துப் பார்த்தேன். ''இந்த இதழில் 'எங்கள் ஊர்ச் செய்தி'கள் என்றொரு கட்டுரை பிரசுரமாகியிருக்கிறது. நேயர்கள் அதை மிகவும் ரசிப்பார்கள் என்று நான் அறிவேன். அதை எழுதியவர் இருபது வயது நிரம்பாத ஓர் இளைஞர் என்றால் எத்தனை ஆச்சரியப்படுவீர்கள் என்றும் நான் அறிவேன்....''

இதைப் படித்தபோது நான் கண்ணீரைக் கொட்டிவிட்டேன். (கல்கி இதழ் 19-12-54)

இப்படி ஒரு சமயத்தில் தேவனை ஆனந்தக் கண்ணீர் கொட்டச் செய்த கல்கி, இன்னொரு சமயத்தில் அவருடைய நாவல் ஒன்றை நிராகரித்து வருத்தப்படச் செய்தாராம். இதைப் பற்றித் துமிலன், தமது பத்திரிகை அனுபவங்களை வெளியிடும் கட்டுரை ஒன்றில் எழுதியிருக்கிறார்.

ஒரு பத்திரிகை ஆசிரியரின் நிலைமை, ஆங்கிலத்தில் சொல்வது போல் ''பொறுமைப்படத் தக்கதல்ல''. உள் எழுத்தாளர்களாகட்டும் வெளி எழுத்தாளர்களாகட்டும் அவர்களுடைய கதை கட்டுரைகள் எல்லாவற்றையுமே ஏற்க இயலாது. மொத்தத்தில் ஒரு பத்திரிகாசிரியர் எழுத்தாளர்களிடையே உண்டாக்கும் மகிழ்ச்சியை விட வருத்தமே அதிகமாயிருக்கும். நிராகரிப்புக்கு உள்ளாகும் எழுத்தாளர்களில் சிலர் வருத்தத்துடன் கோபமும் கொண்டு சம்பந்தப்பட்ட பத்திரிகாசிரியரைத் தூஷித்துப் பேசுவதும் உண்டு.

வேறு சில எழுத்தாளர்கள் நிராகரிப்பால் அடையும் வருத்தத்தை ஓர் ஆக்க சக்தியாய் மாற்றிக் கொள்வது உண்டு. இத்தகையவர்களில் ஒருவர் பெருந் தொகையில் சிறுகதைகளும், நாவல்களும், இசைக் கலைஞர்களின் வரலாறுகளும் எழுதிப் புகழ் பெற்றுள்ள ''எல்லார்வி'' என்ற எல். ஆர். விசுவநாத சர்மா. கல்கிக்கு அம்மாஞ்சி முறை கொண்ட அவர் இளைஞராய் இருக்கையில் ஒரு கதை எழுதி விகடனுக்கு அனுப்பினார். அதைப் பிரசுரிக்குமாறு வேண்டிக் கொண்டு,



''அன்புள்ள அத்தானுக்கு அநேக நமஸ்காரம்'' எனத் தொடங்கிய கடிதம் ஒன்றை அத்துடன் இணைத்திருந்தார். அதற்குப் பதில் விரைவிலேயே வந்தது: ''உறவுக்கும் தொழிலுக்கும் ஒட்டுறவு வைக்காமல், நட்பையும் உறவையும் ஒதுக்கி வைத்து, தனி முயற்சியில் முன்னுக்கு வருவதுதான் மேல்''—என்பதாக.

வெகுவாக ரோசம் கொண்ட ''எல்லார்வி'' அந்த ரோசத்தை வைராக்கியமாக மாற்றிக் கொள்ள, அதிலிருந்து பற்பல கதை, கட்டுரைகள் தோன்றலாயின; பல்வேறு பத்திரிகைகளில் அவை வெளியாகவும் தொடங்கின. கல்கியே அவருடைய கதைகள் சிலவற்றை ''எல்லார்வி'' என்ற புனைபெயருக்குள் மறைந்திருப்பவர் தமது அம்மாஞ்சி என்பதைத் தெரிந்து கொள்ளாமலே, தமது பத்திரிகையில் வெளியிட்டார். ஸ்ரீரங்கத்திலிருந்து ''எல்லார்வி'' சென்னைக்குப் பெயர்ந்து வந்து, மேலும், மேலும் எழுதிப் பெயர் எடுத்தார். தாம்தான் ''எல்லார்வி'' என்று கல்கியிடம் பெருமையுடன் சொல்லிக் கொள்ள வேண்டும் என ஆசைப்பட்டார். ஆனால் முதலில் கூச்சத்தினாலும் பின்னர் சமயம் வாய்க்காததாலும் அந்த ஆசை ஈடேறவில்லை.

கல்கியின் குணப்பாங்கு ஒன்றினால் விளைந்த இந்த அனுபவத்தைக் கவனித்த பிறகு, அவருடைய ''திறமை வேட்டை'' சம்பந்தமான இன்னும் ஓர் உதாரணத்தைப் பார்ப்போம்:

1933 மத்தி வாக்கில், ''ஜெய பாரதி'' பத்திரிகையில் வெளியாகிக் கொண்டிருந்த ''துவையல் தொக்கு'' என்ற பத்தி கல்கியின் கவனத்தைக் கவர்ந்தது. காரமான தலைப்புக் கொண்ட அந்தப் பத்தியில் அவ்வளவு இனிப்பான நகைச்சுவை விருந்தை அளிப்பவர் யார் என்பதைத் துப்புத் துலக்கி விசாரித்தார். அவர்தான், முன்பு திருச்செங்கோடு ஆசிரமத்தில் தம்மைச் சந்தித்தவரும், அப்போது திருவல்லிக்கேணி கதர்க் கடையை நிர்வகித்து வருபவருமான ஆர்.பார்த்தசாரதி என்று கண்டுபிடித்தார். உடனே கல்கி, வாசனுடன் சென்று பார்த்தசாரதியைப் பார்த்து, ''என்ன சுவாமி, ஆளுக்குள்ளே ஆள் அம்மாப் பேட்டை ஆளாய் இருக்கிறீரே?'' என்று கேட்டார். ''இவ்வளவு உயர்ந்த எழுத்துத் திறமையை ஏன் இவ்வளவு ரகசியமாய் ஒளித்து வைத்திருக்கிறீர்?'

அப்படிக் கேட்டதோடு நில்லாமல், அவரை ஆனந்த விகடனில் சேர்த்துக் கொண்டார்—



சர்வ தேசப் பெண்கள் ஆண்டில் மாதரைக் கௌரவிக்க உகாண்டா அதிபர் இடி அமின் செய்த காரியம்:

தமது மெய்காப்பாளர்களாக நான்கு பெண்களை நியமித்திருக்கிறார்!

டெபோனேர் - 'பானி'

---

....சில காலத்துக்கெல்லாம் ஸ்ரீ. ஆர். பார்த்தசாரதிக்கு நான் உண்மையாகவே, 'நம்ம எடிட்டர்' ஆகிவிட்டேன். அவர் எனக்கு உதவி ஆசிரியரானார். அவரோ பி. ஏ. பி. எல்., நானோ பட்டத்தின் எதிரி. ஆனாலும் அவர் எனக்கு உதவி ஆசிரியராக இருந்த காலத்தில் திருஷ்டி பரிகாரத்துக்காக ஒரு தடவையாவது சண்டை பிடித்ததில்லை. சண்டை பிடிக்கலாம் என்று மனத்தில் கூட அவர் நினைத்ததில்லை என்று சர்வ நிச்சயமாய்ச் சொல்லுவேன். மனத்துக்கு மனமே சாட்சி அல்லவா? அவ்வளவு உத்தமமான குணம். குணத்தைப் போலவே வேலைத் திறமையும்... ஸ்ரீ ஆர். பார்த்தசாரதி அந்தக் காலத்தில் எழுதிய ''அரசியல் திருபாச் சரடு'' களை அரசியல் இலக்கியம் என்றே சொல்ல வேண்டும். (பரதன், நைஷ்டிகன் என்ற புனைபெயர்களில் அவர் எழுதிய) மற்றக் கட்டுரைகளும் அப்படியே.

கல்கியின் இந்த வாக்கியங்கள், அவருடைய பத்திரிகையின் 15-6-47 இதழில், ஆர். பார்த்தசாரதியின் ''ஹாஸ்யச் சுரங்கம்'' என்ற புத்தகத்துக்கு வெளியிட்ட மதிப்புரையில் உள்ளவை. கல்கிக்கே சமர்ப்பணமாகி யிருந்த அந்தப் புத்தகம் பிரசுரமான சமயத்தில், அதன் ஆசிரியர் திருச்சி வானொலிநிலையத்தின் தலைமை அதிகாரியாய் இருந்தார்.

அவரைப் போலவே ரேடியோவில் பணிபுரிந்தவர்களில் ரா. அ. பத்மநாபன், வி. கிருஷ்ணசுவாமி ஆகிய இருவரும் முன்பு ஆனந்தவிகடனில் இருந்தவர்கள்.

அவர்களில் பத்மநாபன், அக்காலத்தில் அந்தப் பத்திரிகையின் இன்றி



"சகோதர சகோதரிகளே! நமது தலைவர், காந்தீயச் செம்மல்....."

- ரீதா.

யமையாப் பகுதிகளாய் இருந்த "துக்கடா", "விகடன் பேச்சு", "நேயர் விகடம்" ஆகியவற்றைக் கவனித்துக் கொண்டிருந்தார். அத்துடன் ஆசிரியருக்கும் ஓவியர் மாலிக்கும் இடையே மன மாறுபாடுகள் உண்டாகும் வேளைகளில், அவர்களிடையே "தூது" சென்று காலாகாலத்தில் படங்கள் தயாராகி அச்சுக்குப் போகும்படி செய்யும் சங்கடமான பணியும் அவரைச் சார்ந்திருந்ததாம்.

இதன் தொடர்பாக எஸ். எஸ். வாசன் ஒரு சமயம் சொன்னதைப் பார்க்கலாம்:

> கல்கியை வலது கண் என்று சொன்னால், மாலியை இடது கண் என்று சொல்ல வேண்டும். இருவரும் பேரறிஞர்கள். தங்கள் தங்கள் கலைகளில் தங்களுக்கு நிகரற்றவர்கள். ஆனந்தவிகடனுக்கோ இருவர் கலையும் வேண்டும். அவர்களுக்குள் சிறுசிறு போராட்டங்கள் சிற்சில சமயங்களில் வருவதுண்டு. ஆனால் இதன் பயனே, மாலியின் அரிய படங்களைக் கொண்ட கல்கியின் சிறந்த கட்டுரைகள். (ஆ. வி. 8-9-63)

வானொலிக்குச் செல்வதற்கு முன் விகடனில் இருந்த மற்றொருவரான வி. கிருஷ்ணசுவாமி, "மதுரம்" என்ற புனைபெயருடன் தரமான கதை, கட்டுரைகள் எழுதினார். ஆர். கே. நாராயணனின் "சுவாமியும் சிநேகிதர்களும்" நாவலைத் தமிழாக்கி விகடனில் வெளியிட்டவரும் அவரே.

எம். ஏ. பட்டதாரியான இவருடன் இன்னொரு அதே உயர் பட்டதாரியான எம். வேங்கடராமனையும் தமக்கு உதவியாகக் கல்கி சேர்த்துக் கொண்டிருந்தார். "யார் இந்த வேங்கடராமன்?" என்று கேட்கும்படியாகவும், அதுவே தெரியாமல் மறைந்து போகும்படியாகவும் செய்து விட்டது, அவருடைய புனைபெயரான "நாடோடி". கேலியிலும், கேலிப் போலிப்பிலும் கைதேர்ந்த நாடோடி, அடுத்த வீட்டு அண்ணாசாமியையும், அடுத்தடுத்து எத்தனையோ பிரகிருதிகளையும் நடமாடவிட்டு, விகடன் வாசகர்களைக் குலுங்கக் குலுங்கச் சிரிக்க வைத்தார். "நாடகமே உலகம்" என்ற அவருடைய நூலுக்கான முன்னுரையில் கல்கி சொன்னது போல், தினசரி வாழ்க்கையை அவர் நகைச்சுவைக் கண்கொண்டு பார்த்து, அதில் நாம் காணாத அதிசயங்களையும், ஹாஸ்யத்தையும் கண்டு களித்து நமக்குக் களிப்பூட்டுகிறவர்.

இவருடைய இயற்பெயரையே கொண்ட இன்னொருவரும் கல்கியின் அக்காலக் குழுவில் சேர்ந்து கொண்டார். ஆனால், நல்ல வேளை, அந்தப் பெயர் எல்லோருக்கும் தெரியும்படியாய், அவருடைய புனைபெயருடன் சேர்ந்தே வழங்கிற்று. – "கதிர்" வேங்கடராமன் என்பதாக. கதை, கட்டுரைகளுடன், கல்கியின் மேற்பார்வையில் அவர் அரசியல் குறிப்புக்கள் எழுதுவதில் அடைந்த அனுபவம், பின்னர் அதே பத்திரிகையில் தலையங்கங்கள் எழுதுவதற்கு உதவியாக இருந்தது.

கல்கி விகடனை விட்டு விலகியதற்கு இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் எஸ். எஸ். கோபாலகிருஷ்ணன் உதவி ஆசிரியராகச் சேர்ந்து கொண்டார். அரசியல் நிகழ்ச்சிகளை நையாண்டி செய்து எழுதுவதில் அவரிடம் இருந்த திறமையைக் கல்கி கண்டு, அதற்கு ஊக்கம் கொடுத்துப் பயன்படுத்திக் கொண்டார். கோபு, எஸ். எஸ். ஜி, குறி என்ற பெயர்களில் பொதுக் கட்டுரைகளையும், முத்து, வாண்டு, அம்பி ஆகியவற்றில் குழந்தைக் கதைகளையும் கோபாலகிருஷ்ணன் எழுதினார்.

அவருக்கு அடுத்தாற்போல் விந்தையானதொரு விதத்தில் விகடன் குழுவில் சேர்ந்தார் "சாவி". பல தடவை அங்கே வேலை தேடிப் போய்ப் பலன் இல்லாமற் போகவே, "கத்திரி விகடன்" என்பதாக ஒரு பத்திரிகையைத் தாமே போடப் போவதாக அவர் விளம்பரம் செய்தாராம். அந்த விளம்பரமே அவருக்கு விளம்பரம் கொடுத்து ஆனந்த விகடனில் இடம் தேடிக் கொடுத்ததாம்.

சாவியும் அவருக்கு முந்திய விகடன் குழுவினரில் சிலரும் பின்னர் கல்கியின் சொந்தப் பத்திரிகையில் சேர்ந்தார்கள். அவர்களையும், அவர்களுடைய சகாக்களையும், மற்றும் கல்கி பத்திரிகையில் இடம் பெற்ற வெளி எழுத்தாளர்களையும் பின்னர் காண்போம்.

இரண்டு பெரியோர்களின் பெயர்கள் இந்த அத்தியாயத்தில் வேண்டுமென்றே விடப்பட்டுள்ளன. ராஜாஜியும் டி.கே.சி.யுமாகிய அப்பெரியோர்களின் இலக்கியப் பொன் மலர்கள் தனியாக எடுத்து நுகர்வதற்கு உரியன. (தொடரும்)

# தீவுகள்



இந்திரா பார்த்தசாரதி

## 17

அஞ்சலி சர்வகலாசாலை காப்பி ஹவுஸில் உட்கார்ந்திருந்தாள். மணியைப் பார்த்தாள். 12–30. பன்னிரண்டுக்கு வருவதாகச் சொன்ன ஷம்மியை இன்னும் காணவில்லை. அவளுக்கு எரிச்சலாக வந்தது. எத்தனை நேரந்தான் கையில் இருந்த 'பிரிட்டிஷ் இந்தியா' புத்தகத்தைப் படித்துக் கொண்டிருப்பது? எங்கே போய்த் தொலைந்து விட்டான்? அவனிடம் முக்கியமாகப் பேச வேண்டுமென்று தான் ஃபோன் பண்ணிச் சொல்லியிருக்கும் போது, வருகிறேன் என்று சொல்லிவிட்டு இப்படி ஏமாற்றுகிறானே! அவள் எழுந்து போய்விடுவதென்று தீர்மானித்தாள். அப்புறம் 'இன்னும் சற்று நேரம்' என்று மனத்துக்குள் நினைத்துக் கொண்டு ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்தாள். வளையம் வளையமாகப் புகை விட்டாள். அவற்றைப் பார்த்தபடியே எண்ணினாள்:

'பணக்காரக் 'குடும்பத்தில் பிறப்பது போன்ற கொடுமையை நான் என் எதிரிகளுக்கும் விரும்ப மாட்டேன். பணம் இருந்து விட்டால், அங்கு குடும்பம் இல்லை. குடும்பத்தைச் சேர்ந்த ஒவ்வொருவரும் ஒரு தனித் தீவு. ஒரு தீவுக்கும் இன்னொரு தீவுக்கும் இடையேயுள்ள தூரம் ஆயிரக்கணக்கான மைல்கள். ஒவ்வொருவருக்கும் தனித் தனி பாஷை. மற்றவர்களுக்குப் புரியாது.' இவ்விதம் தனக்குள் சொல்லிக் கொண்டே சாம்பலை 'ஆஷ்-டிரே'யில் தட்டினாள் அஞ்சலி.

சிகரெட் சீக்கிரமே தீர்ந்து போயிற்று. துண்டைக் கீழே போட்டுவிட்டு அதைக் காலால் தேய்த்தாள். மேஜையிலிருந்த தம்ளரை எடுத்துச் சிறிது தண்ணீர் குடித்தாள்.

அப்பொழுது ஷம்மி அங்கு வந்தான்.

''ஸாரி... விஜய்க்கு ஒரு சின்ன 'ஆக்ஸிடெண்ட்'. அவனைப் பார்த்துவிட்டு வந்தேன்'' என்று சொல்லிக் கொண்டே வந்தான். ''வாட் நியூஸ், அஞ்சலி?''

அவன் ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டான்.

''ஏதாவது சாப்பிடுகிறாயா?'' என்று கேட்டான்.

''ஒன்றும் வேண்டாம். எழுந்திரு போகலாம்'' என்றாள் அஞ்சலி.

''எங்கே? எனக்குப் பசிக்கிறது.''

''அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை'' என்று சொல்லிக் கொண்டே அஞ்சலி எழுந்தாள்.

''ப்ளீஸ்...லெட் மி ஹாவ் எ பைட்'' என்று இறைஞ்சினான் ஷம்மி.

''சரி. நீ சாப்பிட்டுக் கொண்டிரு. நான் போகிறேன்.''

அவன் தோள்களைக் குலுக்கிக் கொண்டான். ''மை காட்-கேர்ல்ஸ்!'' என்று தலையாட்டியவாறே முணுமுணுத்தான். பிறகு, ''சரி வா, போகலாம். உனக்காக ஒரு டிஃபனைக் கூட நான் தியாகம் பண்ணக் கூடாதா?'' என்றான்.

காப்பி ஹவுஸை விட்டு இருவரும் வெளியே வந்தார்கள்.

''உன் ஸ்கூட்டர் எங்கே ஷம்மி?''

''லைப்ரரி வாசலில் வைத்திருக்கிறேன்'' என்றான் ஷம்மி.

''அங்கே எதற்குப் போனாய்? உனக்கு அங்கே என்ன வேலை?'' என்று கேட்டாள் அஞ்சலி.

அவன் சிரித்தான். ''அஞ்சலி! யூ ஆர் எ டார்லிங்.''

''நான் உன்னிடம் ஒரு முக்கியமான விஷயம் சொல்ல வேண்டும். அதற்காகத்தான் உன்னைப் பன்னிரண்டு மணிக்கு வரச் சொன்னேன்.''

''என்ன?''

அவர்கள் பல்கலைக் கழக அலுவலகக் கட்டிடங்களைத் தாண்டி 'பாடனி' டிபார்ட்மெண்ட் அருகே போய்க் கொண்டிருந்தனர். எதிர்த்தாற்போல் ஒருவன் 'ஸைலன்ஸர்' இல்லாத மோட்டார் சைக்கிளில் தலை தெறிக்க வந்து கொண்டிருந்தான். எதிர்த்தாற்போல் நடந்து சென்று கொண்டிருந்தவர்களைச் சமாளிக்க அவன் மோட்டார் சைக்கிளை வளைத்து வளைத்து ஓட்டினான். அஞ்சலி மேல் உராய்வது போல் வந்துவிட்டு

ஒரு பெரிய அட்டகாசச் சிரிப்புடன் விலகிச் சென்றான்.

அஞ்சலி திட்டினாள்.

''நிஜமாகவே அவனுக்கு அவன் அப்பாவைத் தெரியாது. இது உனக்கு எப்படித் தெரியும்?'' என்று கேட்டான் ஷம்மி.

''சர்வகலாசாலையில் வரவர இந்த இனம் அதிகரித்துக் கொண்டே போகிறது'' என்றாள் அஞ்சலி.

''என்னைக் கேட்டால் ஒருவனுக்கு அப்பாவையும் தெரியக் கூடாது, அம்மாவையும் தெரியக் கூடாது. அப்பொழுதுதான் அவனால் அசட்டுத்தனமான உணர்ச்சிகள் இல்லாமல் வளர முடியும்'' என்றான் ஷம்மி.

''ஏற்கனவே இவனுக்கு அப்பாவைத் தெரியவில்லை என்ற கோபத்தில்தான் மோட்டார் சைக்கிளை என்மீது மோதுகிறான். அம்மாவையும் தெரியவில்லை என்றால் என்ன ஆவது?'' என்றாள் அஞ்சலி.

''அப்பா அம்மாவை எல்லோருக்கும் தெரிந்திருக்கக்கூடிய ஒரு சமூகத்தில் அவனுக்குத் தன் அப்பாவைத் தெரியவில்லை என்பதுதான் அவன் கோபம். நான் சொல்வது என்னவென்றால், சமூகத்தில் யாருக்குமே அப்பா அம்மா யாரென்று தெரியக் கூடாது. குழந்தைகளை அவை பிறந்தவுடன் அரசாங்கம் வளர்க்க வேண்டும்.''

''நான் அப்படித்தான் வளர்ந்திருக்கிறேன்'' என்றாள் அஞ்சலி.

''எந்த அரசாங்கம் உன்னை வளர்த்தது?''

''எங்கள் வீட்டில் யாருக்குமே அப்பா அம்மா கிடையாது. அவர்களுக்குள்ளிருந்த தகராறுகளைத் தீர்த்துக் கொள்ளவே அவர்களுக்கு நேரம் போதவில்லை. இப்பொழுது அம்மா நிரந்தரமாகப் போய்விட்டாள்.''

''அம்மா போய்விட்டாளா?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டான் ஷம்மி.

''ஆமாம்... வீட்டை விட்டுப் போய்விட்டாள். மத்தியதர வர்க்க பாஷையில் சொல்லப் போனால் 'ஓடி விட்டாள்!' அம்மா போய்விட்டது பற்றி வீட்டில் எல்லாரும் சந்தோஷமாக இருக்கிறார்கள்.... எனக்கும் ஓரளவு நிம்மதிதான் ஏற்பட்டது. இந்தச் செய்தியைக் கேட்டதும்.... ஆனால் இதைப் பற்றி நினைக்க நினைக்க, அவளை அம்மா என்று கருதாமல், இத்தனை பேர்களால் வெறுக்கப்பட்டு வந்த ஒரு பெண் என்று நினைத்துப் பார்க்கும்போது, அவள் தனிமையின் காரணமாக அவளை ஆதரிக்க வேண்டும் என்றும் தோன்றியது. ஆக, செய்தியைக் கேட்டதும், ஏற்பட்ட நிம்மதியின் எதிர்முனையாக ஓர் இனந் தெரியாத எரிச்சல் என்னை வாட்டிக் கொண்டே இருக்கிறது...'' என்றாள் அஞ்சலி.

''எங்கே போயிருக்கிறாள் என்று தெரியும் அல்லவா?'' என்று கேட்டான் ஷம்மி.

''அதுதான் தெரியவில்லை. அப்பாவுக்குத் தெரிந்திருக்கலாம் என்று தோன்றுகிறது. ஆனால் அவர் இதைப் பற்றி ஒன்றுமே கூறாமல் மௌனமாய் இருக்கிறார்.''

''உங்கம்மா வீட்டைவிட்டுப் போவதற்கு என்ன காரணம்? நேற்று ஏதாவது பெரிய சண்டையா?''

''எனக்குத் தெரியாது. அம்மா வீட்டைவிட்டுச் சாயந்திரம் போனவள்தான். அப்புறம் வரவேயில்லை.....''

''உன் அப்பாவோடு ஏதாவது மனஸ்தாபத்தின் காரணமாகப் போயிருக்கிறாள் என்றால், இரண்டு மூன்று நாட்களில் திரும்பி வந்து விடுவாள். உறவினர் வீட்டுக்குப் போயிருக்கலாம்'' என்றான் ஷம்மி.

''எனக்குச் சந்தேகமாயிருக்கிறது'' என்றாள் அஞ்சலி.

''என்ன சந்தேகம்? கொஞ்சம் இரு... பண்டிட்ஜியிடம் சிகரெட் வாங்கிக் கொண்டு வந்துவிடுகிறேன்.....'' என்று சொல்லிக் கொண்டே தெரு ஓரமாக இருந்த பெட்டிக் கடையை நோக்கிச் சென்றான் ஷம்மி.

சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டே ஷம்மி அவளைக் கேட்டான்: ''உனக்குச் சிகரெட்?''

''வேண்டாம்.... வா. அந்த வட்டத்தில் போய் உட்காருவோம். உன்னிடம் நான் பேச வேண்டும்.''

''இப்பொழுதும் பேசிக் கொண்டுதானே இருக்கிறாய்?''

''டோண்ட் பி ஸில்லி....''

அவர்கள் இருவரும் நூல் நிலையத்துக்கு எதிர்த்தாற்போலிருந்த வட்டத்தில் போய் உட்கார்ந்தார்கள். வெய்யில் இதமாக இருந்தது. அஞ்சலி மேலே அணிந்திருந்த 'புல்-ஓவரை'க் கழற்றித் தோள்மீது போட்டுக் கொண்டாள்.

''நீ உன் அப்பாவிடம் சொல்லி விசாரிக்கச் சொல்லுகிறாயா?'' என்று கேட்டாள் அஞ்சலி.

''எதைப் பற்றி?''



''அம்மாவைத் தேடிப் பிடித்தாக வேண்டும். போலீஸ் உயர்தர அதிகாரியின் பின்னையிடம், உத்தியோகப்பூர்வமற்ற முறையில், நான் முறையிடுகிறேன்'' என்றாள் அஞ்சலி.

'' உன் அம்மா வீட்டைவிட்டுப் போன பிறகுதான் அவள் அருமை உனக்குத் தெரிகிறதா? அவள் வீட்டிலிருந்தபோது, தினமும் சண்டை போட்டுக் கொண்டிருந்தாய்...'' என்றான் ஷம்மி.

'' அருமைக்காக நான் சொல்லவில்லை. அம்மா இனிமேல் எப்பொழுதுமே திரும்பி வரமாட்டாள் என்பது போல், வீட்டிலுள்ள எல்லாரும் நடந்து கொள்கிறார்கள். இது எதனால் என்று எனக்குத் தெரிய வேண்டும். ஒரு சிகரெட் கொடு'' என்றாள் அஞ்சலி.

ஷம்மி அவள் சிகரெட்டைப் பற்ற வைத்தான்.

சிறிது நேரம் அங்கு மௌனம் நிலவியது.

'' நான் என்ன செய்ய வேண்டும் என்கிறாய் ?'' என்று கேட்டான் ஷம்மி.

'' உன் அப்பாவிடம் விஷயத்தைச் சொல். என் அம்மா எங்கே போயிருக்கிறாள் என்று கண்டு பிடித்துச் சொல்லச் சொல். அவள் அநேகமாகப்போயிருக்கக் கூடிய இடங்களை





கலாபோஷகர்: நூறு என்ன இருநூறு ரூபா வேணும்னாலும் தருவேன். எனக்கு ஃப்ரேம் மட்டும் போதும்!'' -தோ

யெல்லாம் நான் குறித்துத் தருகிறேன். போலிஸ் ஹோதாவில் இல்லாமல் சாதாரண மாய், மற்றவர்களுடைய கவனத்தை அதிகம் ஈர்க்காமல் விசாரித்து அறிய வேண்டும்'' என்று சொல்லிக் கொண்டே, பற்ற வைத்த சிகரெட்டைத் தூக்கி எறிந்தாள் அஞ்சலி.

'' ஏன் தூக்கி எறிந்துவிட்டாய் ?''

''எனக்குப் பிடிக்கவில்லை....'' என்று கூறியவாறு, ஷம்மியின் மடியிலிருந்த 'நோட் புக்'கை எடுத்து ஒரு காகிதத்தைக் கிழித்து, எழுத ஆரம்பித்தாள் அஞ்சலி.

'' என்ன எழுதுகிறாய்?''

''இந்த முகவரிகளில் விசாரிக்க வேண்டும்.''

''நீயே வந்து என் அப்பாவிடம் சொல் லேன். நான் சொன்னால் அவர் கேட்பாரோ என்னவோ......''

''அப்பாவைக் கண்டு பயமா ?... உனக்கு வெட்கமாக இல்லை?''

''பயம் இல்லை. 'மற்றவர்களுடைய வீட்டு விவகாரங்களைப் பற்றி உனக்கு என்ன அக் கறை ?' என்று என்னைக் கேட்டாரானால் ?— அதுவும் பெரிய வீட்டு விவகாரம். அவர் தயங்கினாலும் தயங்கலாம்.... உன் அம்மா வுக்கே இதைப் பற்றி ஆட்சேபணை இருந் தால்.....? என் அப்பா இவற்றைப் பற்றி யெல்லாம் சிந்திக்கக்கூடும் அல்லவா? — யோசித்துப் பார்.''

'' நானும் வரவேண்டும் என்கிறாயா ?''

''ஆமாம். வந்தால் நல்லது.''

'' சரி..... புறப்படு....''

'' இப்பொழுதே போக வேண்டுமா ?''

''ஆமாம். பிறகு உன் மனசு மாறினாலும் மாறி விடலாம்.''

''உன் மனசு மாறுகிறதா என்று காத் திருந்து பார்ப்போமே?'' என்று சிரித்துக் கொண்டே சொன்னான் ஷம்மி.

'' இவ்வளவு கோழையா நீ? உன்னை மனிதன் என்று நான் நினைத்ததே தப்பு. இந்தக் காலத்து ஆண்கள் தங்கள் கோழைத் தனத்தை மறைக்கத்தான், 'ஸைலன்ஸர்' பொருத்தப்படாத 'ஸ்கூட்டரி'ல் போகி றார்கள் என்று நினைக்கிறேன்!''

'' பெண்கள் சிகரெட் குடிக்கிறார்கள் '' என்றான் ஷம்மி.

'' சரி... நீ வரப் போகிறாயா, இல்லையா?''

ஷம்மி மணியைப் பார்த்தான்.

''மணி ஒன்றரையாகிறது... வீட்டுக்கு 'லஞ்சு'க்கு வந்திருப்பார்.... வீட்டுக்கே போவோம் ....'' என்றான் ஷம்மி.

அவன் எழுந்து போய் நூல்நிலைய வாச லில் நிறுத்தி வைத்திருந்த 'ஸ்கூட்டரை' எடுத்துக் கொண்டு வந்தான். அஞ்சலி பின் னால் உட்கார்ந்து கொண்டாள்.

அவர்கள் வீட்டுக்குப் போனபோது, ஷம்மியின் தந்தை ரவோஜா சாப்பிட்டுக் கொண்டிருந்தார். வேலைக்காரன் பரிமாறிக் கொண்டிருந்தான். ஷம்மிக்கு அம்மா கிடை யாது. அவள் இறந்து போய்ப் பல வருஷங்கள் ஆகின்றன.

'' என்ன இரண்டு பேரும், இந்த நேரத் தில் வந்திருக்கிறீர்கள் ?'' என்று புன்னகை யுடன் கேட்டார் ரவோஜா.

''அஞ்சலிக்கு உங்களுடன் பேசவேண்டு மாம்'' என்றான் ஷம்மி.

'' எதைப் பற்றி ?''

ஷம்மி, தன் அப்பாவைக் கண்டு கொஞ்சம் பயப்படுவதில் ஆச்சரியம் இல்லை என்று தோன்றிற்று அஞ்சலிக்கு. ஆறடி உயரம். உயரத்துக்குத் தகுந்த உடல். மிகவும் அகலமான முகம். அடர்த்தியான மீசை. தலையில் திரண்டிருந்த மயிரிலோ அல்லது மீசையிலோ ஒன்றுகூட நரைக்கவில்லை. 'டை' செய்து கொள்ளுகிறாரோ என்று அஞ்சலி ஷம்மியை ஒரு சமயம் கேட்டாள். அவன் 'இல்லை' என்று அப்பொழுது சத்தியம் செய்தான்.

'' எதைப் பற்றி....? சொல்லேன் !'' என்றார் ரவோஜா.

'' நீங்கள் சாப்பிட்டுவிட்டு வாருங்கள்'' என்றாள் அஞ்சலி.

''இரண்டு பேரும் உட்காருங்கள்.... சாப் பிடலாம்.''

'' எனக்கு வேண்டாம்.... இப்பொழுது தான் சாப்பிட்டேன். ஷம்மிதான் சாப்பிட வில்லை...... உட்காரட்டும்.''

''அது எப்படி அவன் சாப்பிடாமல் நீ சாப் பிட்டாய் ? ஏதாவது சண்டையா ?''

'' இல்லை. நான் பன்னிரண்டு மணிக்கு அவளை 'காப்பி ஹவுஸி'ல் சந்திப்பதாகச் சொன்னேன்..... நான் போகும்போது நேர மாகிவிட்டது. அவள் சாப்பிட்டுவிட்டாள். நான் சாப்பிடும் வரை அவள் காத்திருக்கத் தயாராக இல்லை'' என்றான் ஷம்மி.

'' நேரத்தின் அருமை தெரியாதவர் களுக்கு இதுதான் சரியான பாடம். பட்டினி தான் கிடக்க வேண்டும்'' என்றார் ரவோஜா.

ஷம்மி சாப்பிட உட்கார்ந்தான். வேலைக் காரனிடம் தனக்கும் சாப்பாடு கொண்டு வரும்படி கூறினான்.

'' உன் அப்பா அம்மா சௌக்கியமாக இருக்கிறார்களா ?'' என்று கேட்டார் ரவோஜா.

அஞ்சலி சோபாவில் உட்கார்ந்துகொண்டு ஏதோ ஒரு பத்திரிகையைப் புரட்டிக் கொண் டிருந்தாள். அவள் பதில் சொல்லவில்லை.

'' உன் காது செவிடாகி விட்டதா ?'' என்று கேட்டார் ரவோஜா அஞ்சலியிடம்.

'' ஏன்?''

'' உன் அப்பா அம்மா சௌக்கியமா என்று கேட்டேன், பதிலே சொல்லாமல் உட்கார்ந் திருக்கிறாயே?''

உடலுக்கழகு
உடைகள்—அவை,
நாளெல்லாம்,
நாளுக்குநாள்
புதுமையுடன்
மிளிர்வது
அவசியம்.

அழகு?
யாருக்கு
வேண்டும்?

# நீடித்து நிற்கும் அழகான துணிகளுக்கு-டெபிலைஸ்ட் குறியைப் பார்த்து வாங்குங்கள்

'டெபிலைஸ்ட்' துணிகள், சுருக்கம் விழாதவை என நிரூபணம் பெற்றவை. கசங்காது, எனவே நாளெல்லாம் நீடித்த புதுமைத் தோற்றம். உலகெங்கும் நம்பகம் பெற்ற 'டெபிலைஸ்ட்' சின்னம், நீங்கள் தேர்ந்தெடுக்கும் துணிகள் மீது இருக்கிறது.

இந்தியாவின் முன்னணியில் நிற்கும் மில்களான அரவிந்த், பாம்பே டையிங், பின்னி, டிஸிஎம், மஃபத்லால், ஸ்ரீ அம்பிகா, டாடா மற்றும் தாக்கர்ஸே ஆகிய மில்கள் 'டெபிலைஸ்ட்' குறியை உபயோகிக்கின்றன. நீங்கள் வாங்கும் ஒவ்வொரு மீட்டர் துணியிலும் 'TEBILIZED' சின்னம் இருக்கிறதா என்று பார்த்து வாங்குங்கள்.






**TEBILIZED®** துணிகள் சுருக்கம் விழாதவை என நிரூபணம் பெற்றவை— நீடித்த நல்ல தோற்றத்திற்கு.

டிரேட் மார்க் உரிமையாளர்கள்—
மேட்டூர் பியர்ட்ஸெல் லிட்.
த.பெ. எண் 7. சென்னை 600 001.

Sista's-MBT-284/75 K-Tam



திருமதி சியாமளா ராஜகோபால்
திருச்சிராப்பள்ளி

4-1-1915 — 4-8-1968

"தெய்வந் தொழாஅள் கொழுநன்
தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை"

'' அப்பா சௌக்கியம். அம்மாவைப் பற்றித் தெரியாது.''

''அப்படியென்றால் ?''

''இதைப் பற்றித்தான் நான் உங்களிடம் பேச வந்திருக்கிறேன்.''

'' உன் அம்மாவின் உடம்புக்கு என்ன ? நான் டாக்டர் என்று நினைத்தாயா ?''

'' என் அம்மாவை இரண்டு நாட்களாய்க் காணவில்லை.''

''என்னது?'' ரவோஜா மிகவும் ரசித்து எலும்பை நக்கிக் கொண்டிருந்தவர், 'சடக்' கென்று திரும்பி அவளைப் பார்த்தார்.

''ஆமாம்.... அம்மாவைக் காணவில்லை.... நேற்று மாலை வீட்டை விட்டுப் போனவள் தான், திரும்பி வரவில்லை. எங்கே போயிருக்கிறாள் என்று வீட்டில் யாருக்கும் தெரியாது. விவாகரத்து கோரப் போவதாக அப்பா சொல்லிக் கொண்டிருக்கிறார். அம்மா எங்கே போயிருக்கிறாள் என்று நீங்கள் உத்தியோகப் பூர்வமற்ற முறையில் விசாரித்து, எனக்குச் சொல்ல வேண்டும்.''

ரவோஜா ஒன்றும் பேசாமல் சாப்பிட்டுக் கொண்டிருந்தார். அவர் சிந்தனையில் ஆழ்ந்திருக்கிறார் என்பது தெரிந்தது. அஞ்சலி இதைச் சொல்லிவிட்டு, மறுபடியும் பத்திரிகையைப் புரட்ட ஆரம்பித்தாள்.

ரவோஜா சாப்பிட்டுவிட்டுக் கைகழுவுவதற்காக எழுந்து சென்றார்.

'' சொல்வதைக் கொஞ்சம் நாசூக்காகச் சொல்ல வேண்டாமா ? இப்படியா சொல்வது ?'' என்றான் ஷம்மி.

'' 'அம்மாவைக் காணவில்லை, கண்டு பிடித்துச் சொல்லுங்கள்' என்பதில் நாசூக்கு என்ன வேண்டிக் கிடக்கிறது ?'' என்றாள் அஞ்சலி.

'' உன் அப்பா விவாகரத்து கோரப் போகிறாரா ?''

''ஆமாம்... அப்படித்தான் தெரிகிறது.''

''இட் ஈஸ் வெரி பாட்'' என்றான் ஷம்மி.

'' விவாகரத்து தப்பு என்று நான் சொல்ல மாட்டேன். ஆரம்பத்திலேயே செய்திருக்கலாம்..... இரண்டு பேருக்கும் கொஞ்சம்கூடப் பொருத்தமில்லை.... நாங்கள் எந்தவிதமான நரகச் சூழ்நிலையில் வளர்ந்திருக்கிறோம், தெரியுமா உனக்கு?'' என்றாள் அஞ்சலி.

ரவோஜா அஞ்சலியின் அருகில் வந்து உட்கார்ந்தார். வேலைக்காரன் அவர் எதிரே ஒரு சுருட்டுப் பெட்டியைக் கொண்டு வந்து வைத்தான்.

அவர் ஒன்றை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டார்.

'' எனக்குச் சுருட்டு வாசனை மிகவும் பிடித்திருக்கிறது. சுருட்டுப் பிடிப்பதுதான் ஆண்மை'' என்றாள் அஞ்சலி.

'' எங்கே போயிருப்பாள் என்று நீ நினைக்கிறாய்?'' என்று கேட்டார் ரவோஜா.

''தெரியாது. அம்மாவின் சிநேகிதர்களுக்கெல்லாம் ஃபோன் பண்ணிப் பார்த்தாகி விட்டது. அங்கே யெல்லாம் வரவில்லை என்கிறார்கள். இவர்களில் யார் பொய் சொல்லுகிறார்கள் என்று தெரியவில்லை.....''

'' விவாகரத்து கோரப் போவதாக உன் அப்பா சொல்வதற்கு என்ன காரணம் ?



''இதுதானே? [illegible] நகரத்தில் படித்துவிட்டு வந்த நம்ம பஞ்சாபகேசன் கட்டினது!'' -தோ

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

நேற்று ஏதாவது பெரிய சண்டையா ? கோபித்துக் கொண்டு போயிருக்கிறாளோ ?''

''சண்டை இல்லாத நாளே எங்கள் வீட்டில் கிடையாது. இத்தனை வருஷங்களாக அப்பா, அவளை எதிர்த்து ஒன்றும் பேசமாட்டார். இப்பொழுதுதான் கொஞ்சம் தைரியம் வந்திருக்கிறது. எதிர்க்கிறார்.''

'' இதுதான் உன் அம்மாவுக்குச் சிறிது அதிர்ச்சியைத் தந்திருக்கும். இந்தப் புதிய சூழ்நிலைக்கேற்ப மனத்தைப் பக்குவம் செய்து கொண்டு, திரும்பி வந்து விடுவாள்....பயப் படாதே......''

'' நான் அம்மா போய்விட்டது பற்றிக் கவலைப்படவில்லை. ஆனால் இனிமேல் அவள் திரும்பியே வரமாட்டாள் என்பது போல் வீட்டில் எல்லாரும் நடந்து கொள்கிறார்கள். நேற்று மாலை என்ன நடந்தது என்றும் எனக்குத் தெரியாது. இதற்கெல்லாம் எனக்குத் காரணம் தெரிந்தாக வேண்டும். அம்மா எங்கே இருக்கிறாள் என்று தெரிந்தால்தான் எல்லாம் புரியும்.....'' என்றாள் அஞ்சலி.

''உன் வீட்டு விவகாரத்தில் நான் எப்படித் தலையிட முடியும் ?'' என்றார் ரவோஜா.

'' உத்தியோகப் பூர்வமற்ற முறையில் நீங்கள் விசாரித்துச் சொல்லலாம் அல்லவா ? நான் சில முகவரிகள் தருகிறேன். அங்கே அம்மா இருக்கிறாளா என்று எப்படியாவது எனக்குச் செய்தி அறிந்து சொல்ல வேண்டும்'' என்றாள் அஞ்சலி.

'' இல்லியைவிட்டே வேறு ஊருக்குப் போயிருந்தால் ?'' என்று கேட்டான் ஷம்மி.

''போயிருக்கமாட்டாள். மேக் அப் சாமானும், உடைப் பெட்டி இல்லாமலும், அம்மா எந்த வெளியூருக்கும் போகமாட்டாள்...... நேற்றுப் போன போது, கைப் பையைத் தவிர வேறு எதுவுமே எடுத்துக் கொண்டு போகவில்லை என்கிறான் மான்சிங். இதுதான் எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. அப்படிச் சிநேகிதர்கள் வீட்டுக்குச் சென்றிருந்தாலும், அவர்கள் மிகவும் நெருங்கிய சிநேகிதர்களாகத்தான் இருக்க வேண்டும். காலையில் எழுந்து மேக்—அப் போட்டுக் கொள்ள வேண்டும்.... வேறு புடவை கட்டிக் கொள்ளவேண்டும்..... அவ்வளவு பழக்கம் இல்லாதவர்கள் வீட்டில் இதெல்லாம் செய்வதற்குக் கூச்சமாக இருக்கும்.......''

''அப்படி மிகவும் நெருங்கிய சிநேகிதர்கள் முகவரியை மட்டும்கொடு... பார்க்கலாம்.''

'' அதுவே பெரிய 'லிஸ்ட்'. மூன்று பக்கத்துக்கு எழுதித் தர வேண்டும்'' என்றாள் அஞ்சலி.

**(தொடரும்)**

# மலரும் பூவெனப் பிள்ளை
# வளர்ந்திடப் பலமான துணை—
# இன்க்ரிமின்* டானிக்

இளமைப் பருவம்—பூவாய் மலரும் நாட்கள்—மலர்ந்து சிரித்து உங்கள் மனத்தை அள்ளி வளரும் பருவம்...இப் பருவத்தில் அவளுக்குக் கட்டாயம் தேவை—இன்க்ரிமின். பின்னர் பாருங்களேன் அவள் வளர்ச்சியை! பசித்துப புசிப்பாள்... உண்ணும் உணவெல்லாம் ஓங்கிய வளர்ச்சியாக மாறும். நலம் தரும் வைட்டமின்கள், இரும்புச் சத்து, இவற்றோடு உங்கள் மகளின் வளர்ச்சிக்கு மிகமிக அத்தியாவசியமான அமினோ அமிலம், லைஸின் யாவும் நிறைந்தது இன்க்ரிமின்.



**அடடே! என்ன வளர்ச்சி!**
**உண்டு வளர்வாள்**
**கண்டு மகிழ்வீர்!**

# இன்க்ரிமின்* டானிக்

**உணவையெல்லாம் ஓங்கிய வளர்ச்சியாக்கும்**
**உங்கள் பிள்ளை பூவாய் மலர்ந்து சிரிக்கும்!**

டாக்டர்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமான பெயர்—
Lederle ஸயனமிட் இந்தியா லிமிடெடின் ஒரு பிரிவு

*அமெரிக்கன் ஸயனமிட் கம்பெனியின் ரெஜிஸ்டர்டு டிரேடு மார்க்

175 ml.

Incremin*
syrup

VITAMINS $B_1$, $B_6$, $B_{12}$
LYSINE
WITH IRON

TONIC APPETITE
STIMULANT

டிராப்ஸ் : 2 மாதங்கள் முதல்
2 வயது வரையில்
ஸிரப் : 14 வயது வரையில்

Sista's INC-363 C/75 Tam

**“வா**ல்மீகிக்கு ராயல்டி கொடுத்தோமா? வியாசருக்குக் கொடுத்தோமா? காளிதாசருக்குக் கொடுத்தோமா? அல்லது கம்பர்—துளசி தாசருக்குத்தான் கொடுத்தோமா? ஏதோ பெரிசா ராயல்டி கேட்க வந்தூட்டியே!''

புத்தகப் பிரசுரகர்த்தர் பிரவீண சந்திர வர்மா ஓர் எழுத்தாளரிடம் எடுத்து விளாசிக் கொண்டிருந்தார்.

''அப்போ நம் ஒப்பந்தம்?''

''தூக்கிக் குடப்பிலே போடு!''

''நம்ம விஷயத்தை அப்படிப் போட முடியுமா?''

கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தான் போலா. பிரசுரகர்த்தருக்குப் பிராணனே போய்விடும் போலிருந்தது அவனைப் பார்த்ததும். கை விரல்கள் தந்தி பேசின. ''எழுத்தாளர் சார்! இப்போ தொந்தரவு பண்ணாதீங்க. போய் வாங்க. இவருகிட்டக் கொஞ்சம் வேலே இருக்கு. அப்புறமா உங்க விஷயத்தைப் பேசி முடிவு செய்வோம்!''

எழுத்தாளரை ஒரு விதமாக அனுப்பி விட்டு, ''இந்தாங்க, உங்க பணம்! என்னே ஆளே விடுங்க!'' என்று நடுங்கிய கைகளோடு பெருந் தொகையைப் போலாவின் கையில் வைத்தார்.



# திருடுதல் என் தொழில்

சினிமாக் கதை-3

''அது சரிங்க. இப்போ என்னவோ 'ராயல்டி, ஙேல்டி'ன்னு பேசினீங்களே, அது என்னங்க?''

''புத்தகம் போட்டால் எழுத்தாளருக்குக் கொடுக்கிற தொகை!''

''எத்தனே கொடுப்பீங்க ?''

''அதெல்லாம் ஆளேப் பொறுத்தது.''

''நான் ஒரு புத்தகம் தந்தால் போடுவீங்களா ?''

''சுத்தக் கைநாட்டுப் பேர்வழி நீங்க. உங்களுக்கு என்ன எழுத வரும்?''

''அந்தப் பேச்சை விடுங்க. கொடுத்தாப் போடுவீங்களா? சொல்லுங்க!''

''மாட்டேன்.''

''மாட்டீங்களா?''

போலா தன் கழுத்தைத் தடவிக் காட்டினுன்.

''போடறேன், போடறேன்!''

பிரசுரகர்த்தர் விழி பிதுங்கத் தம் கழுத்தை நீவிவிட்டுக் கொண்டே கூறினர்.

''சரி, என்ன பணம் தருவீங்க?''

''நீங்க என்ன கேட்கிறீங்களோ, அதைத் தரேன்!''

''சரி. ஒன்னரை லட்சம் எடுங்க!''

''ஐயோ, ஆத்தாடி! குல்ஷன் நந்தாவுக்கே கிடைக்காத தொகையாயிருக்கிறதே!''

''வீண் பேச்சு. கேட்டதைக் கொடுக்கனும். இல்லாவிட்டால்....''

''உங்களுக்கும் வேண்டாம், எனக்கும் வேண்டாம். ஒரு லட்சத்து நாற்பத்தொன்பதாயிரம் தந்தூடறேன்!''

''சரி, எடுங்க!''

பிரசுரகர்த்தர் பணம் எடுப்பதற்குள் போலா ஓடிப்போய் ஒரு கையெழுத்துப் பிரதியை எடுத்து வந்தான். இந்தக் கையில் காசு, அந்தக் கையில் கையெழுத்துப் பிரதி! புறப்பட்டு விட்டான் போலா.

''அப்பாடா !''

கயிறு நெரித்தாற் போலிருந்த கழுத்தைத் தடவி விட்டுக் கொண்ட பிரசுரகர்த்தரின் கண்களிலே அந்தக் காட்சி நின்றது. அன்று அவர் கார் ஓட்டிக்கொண்டு போனபோது, ஓர் இளமங்கை அதன் அடியில் மாட்டிக் கொண்டு மயக்கமானாள். 'அடா! கொன்னு போட்டுட்டியே பாவி!' என்று கதறியவாறு ஓடி வந்தான் போலா. ''ஐயோ, ஷர்மீலி! என்னை இப்படித் தனியாத் தவிக்க விட்டுட்டு நீ போயிட்டியே! உனக்கே இது நல்லா இருக்கா?'' என்று ஒப்பாரி வைத்தான்.

பிரசுரகர்த்தர் பிரவீண் சந்துருக்குக் கைகால் வெலவெலத்துப் போய்விட்டது. கம்பி எண்ண நேர்ந்து விடுமோ என்ற பயம். அதைக் கண்ட போலாவே அவருக்கு ஆறுதல் கூறினான். ''இதோ பார் ஐயா! போறவ போயிட்டா. ஐயான்னு வருவாளா, ஆத்தான்னு வருவானா? நான் கேட்கிற பெருந் தொகையை என் கிட்டத் தள்ளிப்பிடு. காதும் காதும் வச்சாப்போலே இவளைக் குழி தோண்டிப் புதைச்சுடுவோம்!'' என்று வழியும் சொன்னான்.

''அது சரி, இப்போ நீ கேட்கிற தொகை கையிலே இல்லையே!''

''அதுக்கென்ன? நீ எங்கே போறே, நானும் தான் எங்கே போறேன்? வீட்டிலே வந்து வாங்கிக்கிறேன். இப்போ இருக்கிறதைப் போட்டு இவளை ஒப்பேத்திவிடு!''

அவன் யோசனையின் பேரில் நடந்த அந்தக் காரியத்துக்குப் பணம் பெற்றுப் போகத்தான் வந்திருந்தான். அதோடு திருட்டுப் பயல் ஒரு புஸ்தகத்தையும் பிரசுரத்துக்கு அவர் தலையில் கட்டி விட்டல்லவா போய் விட்டான்! 'ஒன்றரை லட்சம் தண்டம் இந்தக் குப்பைக் கையெழுத்துப் பிரதிக்கு!' என்றவாறே புரட்டினார். 'திருடுதல் என் தொழில்!' என்று தலைப்புச் சூட்டப் பட்டிருந்தது. 'என் தொழிலா? அவன் தொழில்னு!' என்று முணுமுணுத்தவரைப் பயம் பற்றிக் கொண்டது. 'அவனுக்கும் வேண்டாம், எனக்கும் வேண்டாம். நம் தொழிலாக இருந்து விட்டுப் போகட்டும்!' என்று நிர்மானித்து அதைப் பிரசுரிக்க முடிவு செய்தார்.

''அடி கள்ளி! நிசமாகவே இப்போ நீ என் மனசைத் திருடிட்டே!'' என்றான் போலா ஷர்மீலியைப் பார்த்து. ''அன்னிக்கு ஓர் இரும்புப் பெட்டியைத் தேட்டை போட்ட போது, உருப்படாத காகிதம் கிடைச்சுதே — நான்கூடத் தலையைச் சுற்றித் தூரக் கடாசுன்னேன். அதெல்லாம் முடியாதுன்னு நீ பத்திரமாத் தூக்கிட்டு வந்தியே—அது இன்னிக்கு உருப்பட்டுப் போச்சு! ஒன்னரை லட்ச ரூபாய் சம்பாதிச்சுட்டேன், அதை வச்சுக்கிட்டு! அன்னிக்கு இளிச்சவாயன் ஒருத்தன் அகப்பட்டான் பாரு, அவன் புத்தகம் போடுறவனும், அவன் தலையிலே கட்டிவிட்டேன். என் பேரிலேயே புத்தகமா வரப் போகிறது!''

''அப்போ நீ பெரிய கள்ளன்தான். யாரு எழுதின புத்தகமோ, உன் பேரிலே போட்டுக்கப் போறே!''

''உன் பேரையும் சேர்த்துப் போடச் சொல்லட்டுமா?''

''நான் செத்ததா நாம் ஆடின நாடகம் அம்பலமாகி விடும். மறுபடியும் கம்பி எண்ணும்படியாகிப் போயிடும்! உன் பேரிலேயே வரட்டும் புத்தகம். ஆனால் பாதித் தொகையை இப்படிப் பிரிச்சுப் போடு!''

''மூணு பங்காப் போடணும். அதிலே எனக்கும் ஒரு வீதம் உண்டு!'' எங்கிருந்தோ வந்து முளைத்தான் சங்கர்.

''நயினா! நம்ம கிட்ட வாலாட்டாதே, ஒட்ட நறுக்கிப்பிடுவேன். இந்தத் தொகைக்கும் உனக்கும் என்ன சம்பந்தம் ?''

''என்ன சம்பந்தமா? இந்தப் புத்தகத்தை எழுதினவனே நான்தான். பொக்கிஷமாப் பாதுகாத்துக்கிட்டிருந்தேன். இரும்புப் பெட்டியிலே பூட்டி! நீ திருடிக்கிட்டு வந்தூட்டே! நான் பிரசுரகர்த்தர்களிடம் கொண்டு போயிருந்தா இத்தனை பெரிய









ரா. ஷழிநாதன்

'சோர் மேரா காம்' கதை ஆசிரியருக்கு 'போனி அண்ட் கிளேட்' என்னும் படம் எவ்வளவு தூரம் கை கொடுத்து உதவி யிருக்கிறதோ, தெரியாது! கதையைப் புதிருக்கு மேல் புதிராகப் பின்னிப் பிணைத்து அவிழ்க்கும் முயற்சியில் அபார வெற்றி கண்டிருக்கிறார் என்பது நன்கு தெரிகிறது. சரியான சினிமாக்கதை அந்த அளவில் வெற்றி பெற்றிருக்கும். ஆனால் சுவை யைக் கூட்டுவதாக நினைத்துக் கொண்டு இடையிடையே ஆட்டத்துக்கும் பாட்டத்துக்கும் இடம் அளித் திருப்பது கதை அறுந்து தொங்கவே உதவுகிறது. சமீப காலமாகப் பிராணுக்குக் கூடப் பாடும் ஆசை பிடித்துக் கொண்டிருக்கிறது. கதை சூடு பிடிக்க வேண்டிய இடத்தில் பாட்டும் பாடி, இல்லை, இல்லை; பிறர் பாடத் தாம் ஆடி ரசிகர்களின் பிராணனை எடுப்பதோடு, கதையையும் ஆறப் போட்டு விடுகிறார்.

பிரசுரகர்த்தர் பாகம் ஏற்றிருக்கும் தேவேன் வர்மாவின் நடிப்பே இப் படத்தில் எடுப்பாக இருக்கிறது. அசோக் குமார் விக்டோரியா 203ஐ நினைவுபடுத்தியவாறே நடிக்கிறார். பிராணின் நடிப்பில் அவ்வளவாகப் பிராணன் இல்லை. ஜீனத் அமான் திருட்டுச் சொத்தில் பாதிப் பங்கு போட்டுக் கொள்ளும் ஷர்மிலியாகத் தாம் வந்துள்ளதைத் தமது நடிப்புப் பாதி, எடுப்பும் பாதி யினால் நிரூபிக்கிறார். சசிகபூர் கதையில் அவருக்கு இணையென்றாலும், நடிப்பில் அவருக்கு இணையாக நிற்கவில்லை!

தொகை வந்திருக்காது. நியாயமா முழுத் தொகையும் எனக்குத்தான் சேரணும். இருந்தாலும் ஒரு நியாயத்துக்கு உங்க இரண்டு பேரைப் பார்ட்னராக்கிக் கொள் றேன். அதனாலே மூணு பங்காப் போட்டுடு!'' என்றான் சங்கர்.

''அடப்பாவி! இது நீ எழுதிய புத்தகமா? அதற்கு என்ன அத்தாட்சி? அதெல்லாம் உனக்கு வீதம் தரமுடியாது. போ!''

''முடியாதா? அப்போ உன் குட்டை உடைச்சுடுவேன்.''

''எந்தக் குட்டை உடைச்சுடுவே?''

''அந்தச் சவப்பெட்டி ஒண்ணு போதுமே! நீங்க ரெண்டு பேரும் ஆடிய நாடகத்தை நான் இந்தக் கண்ணாலே பார்த்துக்கிட்டிருந் தேன்! இவனுக்குப் பதிலாகச் சவப் பெட்டிக் குள்ளே கல்தான் இருக்குங்கிறதும் எனக்குத் தெரியும். குழியைத் தோண்டினால் உங்க வண்டவாளம்...''

''அப்போ நிஜமாகவே நீ பார்த்திருக்கே. உன்னோடு வம்பு என்னத்துக்கு! உன் வீதத்தை வாங்கிட்டு ஆளை விடு!'' என்றான் போலா.

'திருடுதல் என் தொழில்' என்னும் புத்த கத்துக்கு ஏகப்பட்ட கிராக்கி. ரசிகர்களின் வற்புறுத்தலின் பேரில் பிரசுரகர்த்தர் அதை எழுதிய ஆசிரியர் போலாவுக்குப் பெரிய பாராட்டு விழாவே நடத்தும்படி ஆகி விட்டது. வந்திருந்த விருந்தினர்கள் கேள் விக்கு மேல் கேள்வி கேட்டு போலாவைத் திக்குமுக்காட வைத்து விட்டனர். 'நல்ல வேளை, உண்மையில் புத்தகம் எழுதிய சங்கரும் கூட இருந்தாரோ, பிழைத்தேனோ?' என்று போலாவே பாராட்டும் அளவுக்குச் சங்கரும் இடையில் புகுந்து பதில்சொன்னான்.

'திருடுதல் என் தொழில்' புத்தகம் பிரபல மாகப் பிரபலமாகப் புதுவகைத் திருட்டுக் களும் பிரபலமாயின. அதில் ஒன்று, திருடுப வன், தான் திருடுகின்ற இடங்களில் எல்லாம் ஏழு என்ற இலக்கத்தை அடையாளமாக விட்டுச் சென்றான். நூல் எழுதியவனே அந்தப் பலே திருடனோ வீருப்பானோ என்ற ஐயம் போலீஸ் இலாகாவுக்கே கூட ஏற்பட்டது. ஆயினும் உண்மைத் திருடன் பிடிபடவில்லை.

ஒரு நாள் பலத்த போலீஸ் பந்தோபஸ் துடன் விலையுயர்ந்த நகைகள் ஏலம் விடப் பட்டுக் கொண்டிருந்தன. தருணம் பார்த்துத் திருடன் அத்தனை நகைகளையும் அபேஸ் செய்து விட்டான். 'ஏழு' என்ற இலக்கத்தை யும் விட்டுச் சென்றான். அவனைத் துரத்திய போலீசாருக்கு ஒரே அதிர்ச்சி! அசப்பில் பார்த்தபோது கடமைவீரர் என்று பாராட் டுப் பெற்ற போலீஸ் அதிகாரி குமாராகத் தோன்றியது. 'வேலியே பயிரை மேய்வதா?' என்று பேசாத வாய் இல்லை. 'குமார் இப் படிச் செய்வாரா? அடி நாட்களில் பிள்ளை தூக்கி அமர சிங்கைக் கையும் மெய்யுமாகப் பிடித்துக் கொடுத்தாரே! அவன் ஒரு செல் வந்தரின் குழந்தையைத் தூக்கிச் சென்று ஐந்து லட்சத்துக்கு 'பிளாக்மெயில்' செய்த பொழுது, அவர் அவனை எப்படிச் சாதுரிய மாக மடக்கினார்? எப்படியாவது அவரிட மிருந்து விடுபட வேண்டுமென்று அத்தனை பணத்தையும் அவர் காலடிகளில் கொட்டி னானே, தொட்டாரா? 'நீதிமன்றத்தில் அமர சிங்கைக் காட்டிக் கொடுத்தால் உன் குழந்தை உனக்கு இல்லை; அதன் உயிரற்ற சடலத்தைக் கூட உன்னால் பார்க்க முடியாது' என்ற எச் சரிக்கையோடு அவர் குழந்தையைக் கடத்திச் சென்றார்களே அவனது ஆட்கள், அப் பொழுதும் அவர் பாசத்துக்கா முதலிடம் கொடுத்தார்? கடமைக்கு அல்லவா கொடுத் தார்! இன்று அந்தக் குழந்தை என்ன ஆயிற்றோ? அதனால் அவராக இருக்க முடி யாது. இருக்கவும் கூடாது என்ற பேச்சு ஒருபுறம். அதற்கேற்றாற்போல் அவர் தமது இரண்டாவது பிள்ளையை ஆளாக்கிப் போலீஸ் இலாகாவிலேயே வேலைக்கு வேறு அமர்த்தி மகிழ்ந்திருந்தார்!

''போலீஸாரின் கையாலாகாத்தனத்தினால் தம் பிள்ளையைப் பறிகொடுத்த தாபத்தில் அவர் மனம் ஏன் மாறியிருக்கக் கூடாது? நொந்துபோன உள்ளம் இப்படிப் புரட்சி செய்யவும் வித்திட்டிருக்கலாமே!'' இப்படி எண்ணிய உள்ளங்களில் போலீஸ் துறையின ருடைய உள்ளங்களும் உண்டு. அவரைப் பிடிக்க முயன்ற போலீஸ் அவரது மகன் பாச உணர்வினால் தன் தந்தையைப் பிடிக்க உதவ மாட்டானோ என்ற ஐயத்தில் அவனை இடமாற்றம் செய்ய முயன்றது.

தந்தையானாலும் குற்றவாளியென்றால் பிடித்தே தீருவேன் என்று கங்கணம் கட்டிக் கொண்டு அவன் செயற்பட்டதைக் கண்டு குமாரின் மனம் பெருமிதமுற்றது. அவன் தம் கைகளில் விலங்கு பூட்டியபொழுதோ, அகமும் முகமும் மலர மகிழ்ந்தே போனார்.

அவரது மகிழ்ச்சி இன்னொருவர் முகத்திலும் நிழலாடியது. ஆம், அமரசிங்தான் அவன்.

'பாவி ஒழிந்தான்!'' என்று குமாரைக் கள்வனாக்கிச் சிறைக் கம்பி எண்ண வைத்த மகிழ்ச்சியில் அவன் இறுமாந்தே போனான். அதற்குத் தூபம் போடுகிறாற் போல் ஷேரா என்னும் வீரன் அவனிடம் வந்து சேரவே, அவன் கொட்டம் இரட்டிப்பாகியது.

அவனது நம்பிக்கைக்குப் பாத்திரமான ஷேரா ஒரு நாள் தன் முகமூடியைக் கிழித்தெறிந்தான். ஆம், அமரசிங்குக்கு எதிரே குமார் போலீஸ் அதிகாரியாக நின்றான். 'ஏய் நம்பர் ஏழு! உன் குமார் முகமூடி எங்கே?'' என்று குமார் கேட்டபொழுது அமரசிங் அதிர்ச்சியுறவில்லை.

''மூத்த மகனின் கதி இரண்டாவது மகனுக்கும் நேர வேண்டாம் என்றால் மரியாதையாக என்னைக் காட்டிக் கொடுக்காமல் இங்கிருந்து போய்விடு!'' என்று கூறித் திரையை விலக்கினான். இரண்டாவது மகன்—போலீஸ் துறையில் உத்தியோகம் பார்ப்பவன் அவனிடம் சிறைப்பட்டிருந்தான்.

''அப்பா! பாசத்துக்கு இடம் கொடாதீர்கள். கடமையைப் புரியுங்கள். இந்தக் கயவனுக்குரிய தண்டனை கிடைத்தே ஆக வேண்டும்!'' என்று மகன் கூறியபொழுது குமாருக்கு உச்சி குளிர்ந்து விட்டது.

''இவரது மூத்த மகனின் கதி ஒன்றும் ஆகிவிடவில்லை. இதோ இவன்தான் இவருடைய மூத்த மகன்!'' என்று ஒருவனைக் கொண்டு வந்து நிறுத்தினாள் அமர சிங்கின் மனைவி. அவன் வேறு யாரும் இல்லை; போலா!

''அப்போ இந்த போலா, இவன் பெற்றோரிடம் சேர்த்துவிடுவதாகக் கூறி இந்த அம்மாவிடம் நான் பெற்றுச் சென்ற பையனா? அந்தக் கொலைகாரப் பயல் ஜான் என் பேரில் உள்ள ஆத்திரத்தை இந்தக் குழந்தைமேல் காட்டியிருப்பானோ என்றல்லவா நான் எண்ணினேன்? சொன்ன சொற்படி நம்மால் இந்தக் குழந்தையைப் பெற்றோர்களிடம் கொண்டு சேர்க்க முடியவில்லையே என்று என் மனம் என்ன தவியாய்த் தவித்தது! ஆண்டவனே! நீ எப்படியெல்லாம் அப்பா விளையாடுகிறாய்!'' என்று மகிழ்ந்து போனான் கூடவே வந்த சங்கர். தொடர்ந்து, ''ஆமாம்! இவர்களுக்கு இப்படி முகமூடி அணிந்து கொண்டு ஒருவரையொருவர் ஏமாற்றலாம் என்று எப்படித் தெரிந்தது?'' என்று தன்னைத் தானே கேட்டுக் கொள்வது போல் உரக்கக் கேட்டுக் கொண்டான்.





''ஸ்மைல் பிளீஸ்!'' -- நீரா

''எப்படித் தெரிந்தது? நீங்கள்தான் சொல்லுங்களேன்!'' என்றாள் ஷர்மிளி.

''ஏன் தெரியாது? சுத்த மடையன் நான். 'நூற்றைம்பத்தொன்பதாவது பக்கத்திலே ஆறாவது பாராவிலே திருடர்கள் 'மாஸ்க்' அணிந்து கொண்டு போலீசாரை ஏமாற்ற முடியும். அதேபோல் போலீசாரும் 'மாஸ்க்' அணிந்து கொண்டு திருடர்களைப் பிடிக்க முடியும்' என்று எழுதினவனே நான்தானே!—ஆமாம், இந்த மாஸ்க் யார் பண்ணிக்கொடுத்திருப்பார்கள்? எனக்குத் தெரிந்து ஒரே ஒருவர்தானே அத்தகைய கைகாரர்!''

''அந்த ஒருவர் என் அப்பாதானே!'' என்றாள் ஷர்மிளி.

''அப்படிச் சொல்லு! நாம் எல்லோரும் ஒரே வட்டத்துக்குள் வந்துவிட்டோம்! ...போலா!''

''என்ன?''

''நமது இத்தனை அநுபவத்தையும் ஒரு புத்தகமாக எழுதி....''

''வாங்க, இப்பவே பிரவீண் பாபு கிட்டப் போவோம்!''

''முடியாது. முடியாதுன்னு முடியாது தான்!'' பிரவீண் சந்த் கத்தினார்.

''முடியாதா? என்னைப் பாரு!'' — கழுத்தைத் தடவினான் போலா.

''போடறேன், போட்டுடறேன்!''

''ராயல்டி இரண்டரை லட்சம் தரணும்!''

''அப்பாடியோவ்! தரமுடியாது. தர முடியாதுன்னு தர முடியாதுதான்!''

''மறு பேச்சில்லையே! அப்போ நான் வரேன்!'' போலா பிடரியைப் பிடித்து விட்டுக் கொண்டே திரும்பினான்.

''போகாதே, நில்! உனக்கும் வேண்டாம், எனக்கும் வேண்டாம், இரண்டு லட்சத்து நாற்பத்தொன்பதாயிரம் தந்துவிடறேன். ஆளை விடு!'' என்றார் பிரவீண்சந்த் வர்மா.

## எம். ஜி. ஆர். பொடி !

எங்கள் ஊர்ப் பொடிக் கடையில் (மூக்குப் பொடி) MGR மூக்குப் பொடி என்று சொல்லி விற்பனை செய்கிறார்கள். அந்தப் பொடிக்கடைக்காரரைப் பார்த்து, ''தாங்கள் MGR ஆதரவாளரா?'' என்றேன்.

''அதில்லை. எங்கள் பொடி Manam, Gunam, Rusi (மணம், குணம், ருசி) நிறைந்தது'' என்றார்.

''பொடியை எப்படி ருசிக்க முடியும்?'' என்று கடைக்காரரிடம் வினவியதில் அவர், ''சிலர் பல் வலிக்கும் பொடியைப் பல்லில் வைத்துக் கொள்கிறார்கள் அல்லவா, அதனால்தான்'' என்றார்.

தகவல்: ஸ்ரீரங்கம் ரா. ராகவன்



"தலை, தலை பத்திரம்!" என்று வித்யா எச்சரித்திருக்கவில்லை என்றால் ஜம்புநாதன் கழுத்துக்கு மேல் பறிகொடுத்துவிட்டுத்தான் நின்றிருப்பான். ஏனென்றால் வாசல் நிலைப் படி, ஐந்தடிக்கு மேல் இருக்கும் நபர்களின் தலையை ஒரு கை பார்த்துவிட்டுத்தான் உள்ளே அனுமதிக்கும் போலிருந்தது.

உள்ளே நுழைந்ததும் ஜம்புநாதன் "மிஸ் வித்யா, உங்கள் தகப்பனார் இந்த வீட்டை விற்றால் யாராவது அரை நிஜார்ப் பையன்களாகப் பார்த்து விற்கச் சொல். அமிதாப் பச்சன் மாதிரி ஆறடி நபர்கள் யாராவது வந்தால் இந்த நிலைப்படியே அவர்களைச் சிரச் சேதம் செய்துவிடும்!" என்றான் கோபத்துடன்.



"அப்பாவிடமே இதை நீங்கள் தெரிவித்து விடலாம் மிஸ்டர்! வீட்டைக் காட்ட வேண்டியது மட்டும்தான் என் வேலை. பேசவேண்டியதெல்லாம் என் அப்பாவிடம்."

"ஹா!" என்று அலறினான் ஜம்பு. வித்யாவையே பார்த்துக் கொண்டு, அவள் பேச்சையே கவனித்துக் கொண்டு அடுத்த அறைக்குள் நுழைந்தவனின் தலையை அந்த அறையின் நிலைப்படி நன்றாகப் பதம் பார்த்திருந்தது.

"இருங்கள். விளக்கைப் போடுகிறேன்" என்று ஸ்விச்சைத் தேடினாள் வித்யா.

"உங்கள் அப்பாவிடம் சொல்லி, இனி வீட்டைப் பார்க்க வருகிறவர்களுக்காக ஒரு டார்ச் விளக்கு வாங்கி வைக்கச் சொல்லுங்கள்!" என்றான் ஜம்பு தலையைத் தடவிக் கொண்டே.

"அதையும் நீங்களே அப்பாவிடம் சொல்லி விடலாமே!" என்ற வித்யாவைக் கோபமாகப் பார்த்தான் ஜம்பு. "பின் எதைத்தான் உங்களிடம் சொல்ல வேண்டும்?"

"அதைக் கடைசியில் சொல்லுகிறேன்!" என்ற வித்யா, "தாண்டுங்கள்... தாண்டிக் குதியுங்கள்!" என்று கூவினாள் திடீரென்று. ஜம்புநாதன் மறு விநாடியே ஹைஜம்புநாதனாக ஓர் எகிறு எகிறிக் குதித்தான். அப்படிக் குதித்ததில் பரணுக்காகப் போட்டிருந்த பலகை அவன் தலையை இரண்டாம் முறையாகக் குசலம் விசாரித்தது. (அவன் அப்படித் தாண்டியிருக்கவில்லையானால் காலை அம்மிக் கல் பதம் பார்த்திருக்கும்!)

வீட்டைக் காண்பித்த பிறகு, ஜம்புநாதனைத் தன் தகப்பனார் ஆபத்சகாயத்திடம் அழைத்துக் கொண்டு போனாள் வித்யா. "நீங்களே டேர்ம்ஸ் எல்லாம் பேசிக்கொள்ளுங்கள்!" என்று சொல்லிவிட்டு மறைந்து விட்டாள்.

ஆபத்சகாயம் ஏன் அந்த வீட்டை இப்படிக் க...ர் என்று அவரைப் பார்த்த போதுதான் ஜம்புவுக்குப் புரிந்தது. மனிதர்

நாலடி உயரம் கூட இருக்க மாட்டார் போலிருந்தது.

''வீட்டைப் பார்த்தீர்களா? பிடித்திருக்கிறதா? வாங்கப் போகிறீர்களா இல்லையா? எத்தனை பேர் உங்கள் குடும்பத்தில்? இடம் போதுமா, போதாதா?'' . என்று கேள்வி மேல் கேள்வியாக அடுக்கினார் ஆபத்சகாயம்.

''சரி, விலையைச் சொல்லுங்கள். எனக்குத் தகவல் தந்தவர் நீங்கள் உடனே விற்கப் போவதாகச் சொன்னார்...''

''யெஸ். ரெடி கேஷ் இருக்கிறதா உம்மிடம்? முப்பதாயிரம் ரூபாய்!''

''இந்தக் குச்சுக்கா முப்பதாயிரம்! அக்கிரமம், அநியாயம்!''

''இந்த மயிலாப்பூரில் இது ரொம்பக் குறைச்சல். விசாரித்துப் பாருங்கள்.''

பக்கத்து அறை வாசலிலிருந்து இப்போது வித்யாவின் தலை தெரிந்தது. 'அப்படித்தான்! நன்றாக மடக்குங்கள் அப்பாவை! விடாதீர்கள்!' என்கிற மாதிரி அபிநயம் பிடித்தாள் அவள்.

ஜம்புவுக்குக் குழப்பமாயிருந்தது. அப்பாவுக்கு எதிராகப் பெண்ணா?

''பின்னே என்ன? சிறிய ஸிட்டிங் ரூம். துளியூண்டு சமையல் அறை. கையகல பெட் ரூம். இதற்கு தர்ட்டி தௌஸண்டு ரொம்ப அதிகம்!''

''எனக்கு அத்தனை வேண்டும் மிஸ்டர்! இதற்கு நிறைய டிமாண்டு இருக்கிறது தெரியுமோ?''

''எதற்கும் யோசனை செய்து பாருங்கள். நாளைக்கு வருகிறேன்!'' என்று கிளம்பினான் ஜம்பு.

வாசலுக்கு வந்ததும் வித்யா மறுபடியும் அவன் முன் வந்து. ''நீங்கள் நிச்சயமாக இந்த வீட்டை வாங்கத்தான் போகிறீர்களா?'' என்று கேட்டாள்.

இதைக் கேட்டதும் ஜம்புவுக்கு மறுபடியும் தூக்கி வாரிப் போட்டது.

''நீங்கள் இந்த வீட்டை ஏதும் எக்ஸிபிஷன் மாதிரி வைத்து நடத்துகிறீர்களா என்ன சும்மா, வந்து பார்த்துவிட்டுப் போக? ஐ'ம் கோயிங் டு பை திஸ் ஹவுஸ்!''



''தரை யெல்லாம் குண்டும் குழியுமாக இருக்கிறதே, பார்க்கவில்லை?''

''சிமெண்ட் போட்டுச் சரி செய்து விடலாம்!''

''மேலே பரண்; தலையை இடிக்கும்!''

''எடுத்துவிட்டால் போகிறது.''

''எல்லாம் சின்னச் சின்ன ரூம்!''

''ஒரு சுவரை இடித்துப் பெரிதாக்கிவிடு கிறேன்.''

''எதற்குச் சுற்றி வளைக்க வேண்டும்? நேரா கவே சொல்லி விடுகிறேன். இந்த வீட்டில் தான் நான் பிறந்து வளர்ந்தேன். பள்ளிப் படிப்பில் பரிசுகளுடன் பாஸ் செய்தேன். கல்லூரியிலும் முதல் வகுப்பு. வேலைகூடக் கிடைத்துவிடும்போல் இருக்கிறது. இதை விட்டுவிட எனக்கு மனசில்லை. ப்ளீஸ், இதைத் தயவுசெய்து வாங்காதீர்கள்!''

''நான் இந்த வீட்டை வாங்கவில்லை யென்றால் உங்கள் கல்யாணமே நடை பெறாது மிஸ் வித்யா!''

''ஹா! அதையும் உங்களிடம் அப்பா சொல்லிவிட்டாரா! பரவாயில்லை... எனக் குக் கல்யாணமும் வேண்டாம் ஒன்றும் வேண் டாம். இந்த வீடு கையை விட்டுப் போகா மல் இருந்தால் போதும்!''

ஜம்புவுக்குக் குழப்பமா யிருந்தது.

## 2

''இதுதானே மிஸ்டர் ஜம்புநாதன் வீடு'' என்று வித்யா விசாரித்துக் கொண்டு திரு வல்லிக்கேணி பெரிய தெரு வீட்டு வாசல் ஒன்றில் நின்றபோது, அப்போதுதான் ஆபீஸி லிருந்து ஸ்கூட்டரில் வந்து இறங்கிய ஜம்பு அவளையே பார்த்தான்.

வித்யாவின் முகம் சற்று வாடியிருந்தது. (வாடியிருந்தாலும் அந்தக் கவர்ச்சி போக வில்லை என்று நினைத்துக்கொண்டான் ஜம்பு.)

''வாசலிலேயே நிற்க வைத்துப் பேசி அனுப்பி வைத்துவிடப் போகிறீர்களா?''

''மன்னிக்க வேண்டும், வாருங்கள் உள்ளே!''

ஜம்புநாதன் வித்யா பின்தொடர வீட் டுக்குள்ளே நுழைந்தபோது அவன் அப்பா வும் அம்மாவும் அவர்களை வியப்போடு பார்த் தார்கள்.

நேரத்தை வீணாக்காமல், ''இவள்தான் மிஸ் வித்யா. மிஸ்டர் ஆபத்சகாயத்தின் பெண்!'' என்று அவர்களுக்கு அறிமுகப் படுத்திவிட்டு, ''உட்காருங்கள் மிஸ்'' என் றான் ஜம்பு.

''நீங்கள் வீட்டைப் பார்த்து விட்டுப் போன பிறகு அப்பா ரொம்பவும் நம்பிக்கை யோடு காத்திருந்தார். அப்புறம் நீங்கள் வரவில்லையே என்று மிகவும் வருத்தப்பட்டுக் கொண்டிருக்கிறார்...''

''என்ன செய்வது! உங்களுக்குத்தான் அந்த ஆகிவந்த வீட்டை விட்டுவிட மன சில்லையே? அப்புறம் நான் ராவணன் மாதிரி பெயர்த்து எடுத்துக் கொண்டு போக முடி யுமோ?'' என்று ஜம்பு பதிலளித்தபோதுதான் அவன் அப்பா குருமூர்த்திக்கு, அவள் ஜம்பு பார்த்துவிட்டு வந்த வீட்டுக்காரரின் பெண் என்று புரிந்தது.

''அப்பா மிகவும் கலவரமடைந்து போயிருக்கிறார். பெண்ணுக்குக் கல்யாணம் செய்ய முடியவில்லையே என்று பெரிய கவலை.''

''அதாவது உங்களுக்கு?''

வித்யா வெட்கத்துடன் தலையைக் குனிந்து கொண்டாள்.

''முதல் தடை நீங்கள் விடுத்து விட் டீர்கள் வாங்கக்கூடாது என்று. இரண்டா வது விஷயம் விலை. ஒரேயடியாக உச்சாணிக் கொம்பில் போய் உட்கார்ந்திருக்கிறார் உங்கள் அப்பா!''

''இப்போது அவர் தரையில் துவண்டு போய்க் கிடக்கிறார்!'' என்றாள் வித்யா. ''நீங்கள் மனசு வைத்தால்தான் உண்டு.''

''ஜம்பு, இதென்னடா வம்பு?'' என்று கேட்டார் குருமூர்த்தி.

இதற்குள் ஜம்புவின் அம்மா இருவருக்கும் காப்பி கொண்டு வந்து கொடுத்துவிட்டு, வித்யாவையே பார்த்துக் கொண்டிருந்தவள், ''எதற்கு இரண்டு பேரும் இப்படிக் குரங் கைப் பறிகொடுத்த ஆண்டி மாதிரி உட் கார்ந்திருக்கிறீர்கள்? என்ன விஷயம்?'' என்று கேட்டாள்.

''அம்மா, உனக்குப் புரியாது இந்த விஷயம்!''

''எதுடா எனக்குப் புரியாது என்கிறே? இவள் அப்பா வீட்டை விற்கப் பார்க்கிறார். அவளுக்கு அதைவிட்டுவிட மனசில்லை. இதைத் தான் நீ பார்த்துவிட்டு வந்த அன்றைக்கே சொன்னாய். இப்போது என்ன புதுக் குழப்பம்?''

''அம்மா, விஷயம் ஒன்றும் பிரமாத மில்லை. வித்யாவின் அப்பாவுக்கு உடம்பு கவலையினால் மிக மோசமாகி விட்டது. வீட்டை விற்றுவிட்டுத்தான் பெண்ணுக்குக் கல்யாணம் பண்ண வேண்டும். புரிந்ததா?''

''நீங்கள் உடனடியாக அப்பாவிடம் வந்து, கவலைப்படாதீர்கள்; வீடு விற்றுப் போய்விடும் என்று சொல்ல வேண்டும்'' என்றாள் வித்யா.

''அப்புறம்?''

''உங்கள் பெண்ணுக்குக் கல்யாணம் ஆகி விடும் என்று சொல்ல வேண்டும்!''

''மிஸ் வித்யா! சுருக்கமாக, நீங்கள் என் கையில் ஓர் உடுக்கையைத் தந்து குடுகுடுப் பாண்டி வேஷம் போட்டு உங்கள் வீட்டு வாசலில் நின்று கொண்டு மேற்படி ஆரு டங்கள் சொல்ல வேண்டும் என்கிறீர்கள். அப்படித்தானே?''

வித்யா அந்தக் காட்சியை மனசுக்குள் பார்த்துவிட்டுச் சிரிப்பை அடக்கிக்கொண் டாள்.

''சரி என்று சொல்லுடா ஜம்பு!'' என்றாள் அம்மா இடையே.

ஜம்பு மிகுந்த ஆச்சரியத்துடன் அவளைப் பார்த்தான்.

## 3

மறுநாள் ஜம்புநாதன் ஆபத்சகாயத்தின் வீட்டுக்குப் போனபோது, அவர் மகிழ்ச்சி

---



அம்மா: ஏண்டா ஓடிக் கொண்டிருந்த கடிகாரத்தை நிறுத்தி வச்சிருக்கே?
மகன்: நீதானேம்மா சொன்னே நேரத்தை மிச்சப்படுத்தவேணுமின்னு. அதனால்தான் நிறுத்திவச்சிருக்கேன்!

- சரஸ்வதி பஞ்சு



கல்கி காரியாலயத்தைச் சேர்ந்த ஸ்ரீ K. வெங்கட்ராமன் அவர்கள் குமாரி சௌபாக்கியவதி **சத்யபாமாவுக்கும்,** கும்பகோணம் ஸ்ரீ A. ராஜகோபாலய்யர் அவர்களின் சகோதரர் சிரஞ்சீவி **A. கல்யாணசுந்தரத்துக்கும்** சென்னையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்



பெங்களூர் பஞ்சாப் நேஷனல் பாங்கைச் சேர்ந்த ஸ்ரீ K. P. சுப்ரமணியன் அவர்கள் குமாரர் சிரஞ்சீவி **செல்லப்பாவுக்கும்,** திருச்சிற்றம்பலம் A. S. M. (S. Rly) ஸ்ரீ P. S. சுப்பிரமணிய அய்யர் அவர்கள் குமாரத்தி சௌ. **விஜயாவுக்கும்** திருக்கண்ணமங்கையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்

யில் துள்ளிக்கொண்டு ஓடிவந்து அவனைத் தலைமேல் வைத்துக்கொண்டு கூத்தாடவில்லை.

''நீங்கள் வரவே மாட்டீர்கள் என்றுதான் நினைத்தேன்!'' என்றார் ஆபத்சகாயம் விரக்தியாக.

''என்னசெய்வது! தலைக்கு மேலே வேலை!''

''ஏதாவது ஸீலிங் ஃபான் விற்கிற கம்பெனியில் வேலை பார்க்கிறீர்களோ?'' என்று ஆபத்சகாயம் கேட்டபோதுதான் அவர்கூட ஜோக் அடிக்கிறார் என்று புரிந்தது ஜம்புவுக்கு.

அதற்குள் உள்ளேயிருந்து வித்யா வந்து விடவே, ''இவளைப் பெண்பார்த்துவிட்டுப் போயிருக்கிறீர்கள். வித்யாவுக்கு அழகுக்கு என்ன குறைச்சல்? ஒப்புக்கொண்டு விட்டீர்களானால் பணம் உடனடியாகத் தேவைப்படும். உம்மிடம் இருக்கிறதோ?'' என்று ஆவலுடன் கேட்டார் ஆபத்.

''அடுத்த வாரம் பணத்தைக் கொண்டு வந்து கொடுக்கிறேன். போதுமா?'' என்று கேட்டான் ஜம்பு.

''திங்கட்கிழமை அவர்களுக்கு நான் பணத்தைக் கொடுத்துப் பதிலும் சொல்லியாக வேண்டும். அதற்குள் கொண்டு வந்து தந்து விட்டால் போதும். உங்களைத்தான் நான் மலைபோல் நம்பியிருக்கிறேன்!''

'என்னை மலைபோல் நம்ப, கேவலம் என் பெயர்கூட அண்ணாமலை இல்லையே!' என்று நினைத்துக் கொண்டான் ஜம்பு.

4

**ம**று வாரம் ஜம்பு ஆபத்சகாயத்தைத் தேடிப் போனபோது வாசலிலேயே காத்திருந்த வித்யா அவனை எச்சரித்தாள் அப்பா மிகவும் கோபமாக இருப்பதாக.

''இன்றைக்குத் திங்கட் கிழமை இல்லை; சனிக்கிழமை என்று தெரியுமில்லையோ?'' என்று கேட்டாள்.

அவன் உள்ளே நுழைந்தபோது ஆபத்சகாயம் முகத்தைத் திருப்பிக்கொண்டு விட்டார்.

''என் பெண் கல்யாணம் நின்றுபோய் விட்டது ஐயா! நீர் பணத்தைக் கொண்டு வந்து திங்கட்கிழமை தருகிறேன் என்றீர். இன்றைக்கு என்ன கிழமை?''

''சனிக் கிழமை... கொஞ்சம் டயம் கேட்டிருக்கலாமே நீங்கள்....?''

''டயமா? எல்லாம் மோசமான டயம் எனக்கு. அன்றைக்கே நீர் அட்வான்ஸ் கொண்டு வந்து கொடுத்திருந்தால் கல்யாணம் நிச்சயம் பண்ணியிருப்பேன். நீர் வரவில்லை.... திருப்திதானே உமக்கு? போய்ச் சேரும்!''

''நீங்கள் வருத்தப்பட்டு நொந்து போயிருக்கிறீர்கள்...''

''ஆமாம் ஐயா, என் பெண் கல்யாணம் நின்றுபோய்விட்டதே!''

''உங்கள் பெண் கல்யாணம்தானே? நடந்துவிடும். நடந்தே விடும், கவலையை விடுங்கள்!''

''என்ன ஜோஸியம் இது? பிள்ளை எங்கே?''

''பிள்ளையைத் தேடவே வேண்டாம். ஒரு பிரபல கம்பெனியில் மானேஜர். ஆயிரம் ரூபாய்க்கு மேல் சம்பளம். சொந்த ஸ்கூட்டர் சொந்த அம்மா, சொந்த அப்பா!'' என்று நீட்டிக் கொண்டே போன ஜம்புவை ஆச்சரியத்துடன் ஏறிட்டுப் பார்த்தார் ஆபத்து.

''எங்கே இருக்கிறான் பிள்ளை?''

''உங்கள் முன்னாலேயே!'' என்று ஜம்பு சொன்னபோது, வித்யா அங்கிருந்து பளிச் சென்று ஓடி மறைந்து விட்டாள்.

''ஆகா, என்ன தங்கமான மனசு உங்களுக்கு! ஆனால்...ஆனால்... உம்மிடமே பணம் வாங்கி இந்த வீட்டை விற்று இந்தக் கல்யாணத்தை நடத்த எனக்கு எப்படியோ இருக்கிறது...''

''அதைப் பற்றி நீங்கள் வருத்தப்பட வேண்டாம். உங்கள் பெண்ணுக்கு வீட்டைக் கொடுங்கள். எனக்கு உங்கள் பெண்ணைக் கொடுங்கள்!'' என்று ஜம்பு வெகு எளிதாகப் பிரச்னையைத் தீர்த்து வைத்தபோது, ''மாப்பிள்ளை, நீங்கள் அன்றைக்கே இதைச் சொல்லாமல் போய்விட்டீர்களே!'' என்று மகிழ்ச்சியில் கூவினார் ஆபத்சகாயம்.

ஜம்புநாதன் வித்யாவைத் தேடி வெளியே வந்தபோது, ''நல்ல வேளை, உங்கள் அம்மா அன்றைக்கு இந்த யோசனையைச் சொல்லியிருக்கவில்லையானால் இந்த வீடு கையை விட்டுப் போயிருக்கும்!'' என்றாள் வித்யா.

''நீயும் ஏதேனும் ஒரு கப்புணி அல்லது கப்புடுவைக் கல்யாணம் பண்ணிக்கொண்டு போயிருப்பாய்'' என்றான் ஜம்பு. தொடர்ந்து ''நான் உன் வீட்டைப் பார்க்க மாத்திரம் வரவில்லையே! உன்னையும் சேர்த்துத்தானே பார்க்க வந்தேன்!'' என்று ஜம்பு சொன்னபோது, ''கடைசியில் விலை கொடுக்காமலே வீடு கிடைத்து விட்டது உங்களுக்கு!'' என்றாள் வித்யா.

''இருந்தாலும் இது ரொம்பக் குறைச்சல் வித்யா. முன்னெல்லாம் ராஜ குமாரியைத் தந்து பாதி ராஜ்யம் தருவாராம் மகாராஜா. உன் அப்பா ஒரு சாதாரண வீடுதானே தந்திருக்கிறார் இந்த ராஜகுமாரிக்காக?'' என்றான் ஜம்பு.

அம்மா
அவங்க பாத்ரூம்
ஏன் அவ்வளவு
நாற்றமடிக்குது
நம்முடையது
எவ்வளவு
வாசனையா
யிருக்கு?

கண்ணு, நாம்
ஓடோனில்
உபயோகிக்கிறோம்




ஓடோனில் துர்நாற்றங்களை உடனடியாக அழிக்கிறது. பாத்ரூம் போன்ற இடங்களைத் தூய்மையாகவும் நறுமணத்துடனும் வைக்கிறது.

ஓடோனில் பல்வேறு நறுமணங்களில் கிடைக்கின்றன. ஓடோனில் வகைவகையான அளவுகளில், நிறங்களில், டப்பாக்களில் கிடைக்கின்றன.

**பல்சாரா**
நலமான வாழ்க்கைக்கு
நவீனமான வசதிகள்

BALSARA பல்சாரா & கம்பெனி (பிரை.) லிட்.

CHAITRA-BLS-7 TAM

# நகர்வலம்: அரசர்களின் அறிவும்

ஜெய்ப்பூரைச் சுற்றிப் பார்க்கத் தில்லியில் ரயில் ஏறியபோது, ஊரைச் சுற்றிக் காட்டவும் பல சரித்திரச் சம்பவங்களைச் சொந்தச் சரக்குடன் கலந்து கொடுக்கவும் ஒரு 'கைட்' கிடைப்பார் என்று எதிர்பார்க்கவில்லை.

விடிகாலை ஜெய்ப்பூர் ரயில் நிலையத்தில் நின்று கொண்டு பேந்தப் பேந்தப் பார்த்துக் கொண்டிருந்த போது, ஒட்டியது போன்ற மீசையும் சோடா புட்டிக் கண்ணாடியும், ஜிப்பாவும் பாண்டுமாகத் தோன்றிய ஒரு நபர், "ஊரைச் சுற்றிப் பார்க்கணுமா?... நான் கம்ப்ளீட்டாகச் சுற்றிக் காண்பிக்கிறேன். யூ ஸீ... ஐ ஆம் எ ரிடயர்ட் ஹெட் கிளார்க்" என்றார்.

ஸ்டேஷனுக்கு அருகில் இருந்த டீக்கடையில் 'சாயா' சாப்பிட்டுவிட்டுப் புறப்பட்டோம்.

* * *

ஜெய்ப்பூர் நகரத்தின் பரந்த வீதிகள்தாம் நம் கவனத்தைக் கவர்கின்றன.



◘ மியூசியக் கட்டடமே அழகிய காட்சிப் பொருள்!

"சார்.....! 111 அடி ரோடுகள் இவை. சுமார் 225 வருடங்களுக்கு முன்பு மன்னர் சவாய் ஜெய்சிங் இந்த நகரை நிர்மாணித்தார். முக்கியமான வீதிகளை மிக அகலமாக அமைத்தார். எல்லா வீதிகளும் தெருக்களும் நேர் கோணத்தில் தான் குறுக்கிடும். ஒரு பிரம்மாண்ட நீண்ட சதுரம் ஜெய்ப்பூர்...இந்த ஊரில் யாரும் தொலைந்து போக முடியாது. எந்தச் சந்தில் அகப்பட்டுக் கொண்டாலும் நேராக வந்தால் மெயின் ரோட்டுக்கு வந்துவிடலாம்" என்று உற்சாகமாக ஆரம்பித்தார் மிஸ்டர் ஹெட்கிளார்க்.

"ஹெட்கிளார்க் சார், முதலில் உங்கள் பெயரைச் சொல்லுங்கள்" என்றேன்.

"நான் குமார்.... என் பெயர் கிடக்கட்டும்; இந்த ஊரை நிர்மாணித்தவர் பெயர் தெரியுமா? 'ஒன்றேகால்' ஜெய்சிங்!"

"குமார்ஜி.... ஒன்றேகாலா?"

◘ பிரமிப்பூட்டும் அக்பர் அரண்மனையில் கண்ணாடி அறையின் வெளிப்புறம்.



◘ உடலில் நகை: முகத்தில் புன்னகை!





# அரசியரின் அழகும்!



சவாய் ஜெய்சிங்

"ஆமாம்.... 'சவாய்' என்றால் ஒன்றே கால் என்று பொருள். தன் பெயருக்கு முன்பு இதை மன்னன் வைத்துக் கொண்டதற்கு ஒரு காரணம் உண்டு. இவருடைய தாத்தா ஜெய்சிங் சிறந்த வீரர்தான். ஆனால் பேரன் ஜெய்சிங் அசகாய சூரர். கணிதம், வானசாஸ்திரம், யுத்த முறை, நகர நிர்மாணக் கலை ஆகியவைகளில் அபாரத் திறமை படைத்தவர். யாரோ ஒரு மன்னர் — அக்பரோ யாரோ—இவரைப் பார்த்து, 'நீர் ஒற்றை ஆள் இல்லை. உன் தாத்தாவைவிட ஒன்றேகால் மடங்கு திறமையான ஆசாமி' என்று பாராட்டினாராம். அதைப் பெருமையுடன் ஏற்றுக் கொண்டு சவாய் ஜெய்சிங் ஆனார்! ஜெய்ப்பூருக்குக்கூட முதலில் சவாய்ப்பூர் என்றுபெயர் வைக்கப்பட்டதாக ஒரு தகவல் உண்டு."

"அவ்வளவு பெரிய மேதையா அவர் ?" என்று கேட்டதும், குமாருக்கு உர்ரென்று வந்தது. "சார், நீங்கள்..... இந்த ஊரையும் அரண்மனைகளையும், ஜந்தர்மந்தர், மியூசியம், ஆகியவைகளையெல்லாம் பார்த்துவிட்டு, பிறகு இந்தக் கேள்வி கேளுங்கள், பார்க்கிறேன்" என்றார் சவாலாக !

குமார் பிறகு தொடர்ந்தார்: "ஜெய்சிங்கைப் பற்றி நேரு என்ன சொல்லியிருக்கிறார் தெரியுமா ? 'இவர் எந்த நாட்டிலும் எந்தக் காலத்திலும் ஈடு இணையற்ற மனிதராகத் திகழக் கூடியவர்' என்று பாராட்டியிருக்கிறார்."

* * *

"ஜெய்ப்பூரை மொத்தம் ஒன்பது முக்கிய பகுதிகளாகப் பிரித்துக் கட்டியிருக்கிறார். இது நவ நிதிகளைக் குறிப்பிடுகிறதாம். ஊரைச் சுற்றி ஒரு பிரம்மாண்டமான 'வால்' வால் போல் வளைந்து வருகிறது.

"இந்த 'வால்' (சுவர்) இருக்கிறதே, இருபது அடி உயரம், ஒன்பது அடி அகலம். எட்டு கதவுகள் உள்ளன. இவைகளை மூடிவிட்டால், ஊருக்குள் ஈ, காக்கை நுழைய முடியாது."

'கொசு மட்டும் நுழையுமாக்கும்' என்று மனத்துக்குள் சொல்லிக் கொண்டு, "அது இருக்கட்டும், ஹவாமஹல் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். அதை முதலில் பார்க்க வேண்டுமே...." என்றேன்.

"ஜோஹ்ரி பஜார் வழியாகப் போடி நடையாகப் போகலாம். கடைசியில் மஹல் இருக்கிறது..... இதோ இந்தப் பஜார்க் கடைகளில் பிரசித்திபெற்ற 'டை அண்ட் டை' புடவைகளைப் பாருங்கள். இதற்கு 'பாந்தியா' என்று பெயர். ஒரு புடவையில் ஆயிரக்கணக்கான முடிச்சுகள் போட்டுச் சாயம் தோய்த்துப் பிறகு முடிச்சுகளை அவிழ்த்துவிடுகிறார்கள்...பார்க்க எவ்வளவு கவர்ச்சிகரமாக இருக்கின்றன. அதே மாதிரி 'சாங்கனேரி' பிரிண்ட் புடவைகளும் இங்கு பிரசித்தம். (இவை சுங்குடிப் புடவை மாதிரி உள்ளன.)

ஒரு கடையில், கண்களைப் பறிக்கும் அழகிய



ஜந்தர் மந்தர் (நடுவே இருப்பது சூரிய யந்திரம் - செகண்ட் கூட வித்தியாசமில்லாதபடி நேரத்தைக் காட்டும்!)



ஹவா மகால் — 365 பலகணிகள்.

கண்ணாடிப் பொம்மைகள் நம் கவனத்தைக் கவருகின்றன.

''இதுவா சார், அரக்கு இல்லே அரக்கு. அதில் பொம்மை செய்துவிட்டுக் கண்ணாடித் துண்டுகளை, பொடிப் பொடி பில்லைத் துண்டுகளை அதில் நெருக்கமாக முழுதும் ஒட்டியிருக்கிறார்கள்..... விலையும் குறைவுதான். மொத்தம் 'லேபருக்' குத்தான் விலை......''

யானை, ஒட்டகம், அன்னம், மேஜை, விளக்கு, அப்சரஸ் போன்ற பல பொம்மைகள் பளபளக்கின்றன.

''பேரம் கிடையாது. ஒரே விலை ஏழு ரூபாய்'' என்று சொல்லப்பட்ட ஒரு ஜோடி கிளியை நான்கு ரூபாய் கொடுத்து வாங்கினேன்!

பஜாரில் அங்கங்கே கரும்பு ரசம் விற்கிறார்கள். நம் ஊர்ச் சந்தைகளில் விற்பது போல் மணிமாலைகள், தாயத்துகள், பட்டுக் கயிறு, குஞ்சலம், பித்தளை வெள்ளி கடகம் என்று ஏகப்பட்ட பொருள்கள் இருக்கின்றன. (கடகங்களைப் பற்றி ஒன்று கூற வேண்டும். சில கடகங்கள் கால் கிலோ கனம் இருக்கும்!)

* * *

''இதுதான் ஹவா மகல்.....'' என்கிறார் குமார். அவர் கூறும் வரை ஹவா மகலைப் பார்த்து ரசிக்கிறோம்.

அந்த இளஞ் சிவப்பு கட்டடத்தின் அமைப்பும் அழகும் நம்மைத் திகைக்க வைக்கின்றன. எத்தனை சாளரங்கள்! அவைகளில் எத்தனை நுணுக்கமான வேலைப்பாடுகள். சிவந்த நிற அழகி ஒருத்திக்கு வெண் குழம்பால் மிகவும் நளினமாக அழகுபடுத்தியதுபோல் கட்டடம் முழுதும் வெண்மைக் கோடுகள் ஓடுகின்றன. தேன் கூடு போன்ற அமைப்பு கண்ணுக்கு இனிமையாகக் காட்சி தருகிறது. ''இந்த ஐந்து மாடிக் கட்டடம் ராணிமார்களின் வீடு. சாளரங்கள் வழியாக வெற்றி ஊர்வலங்களைப் பார்ப்பார்கள், அரச குலப் பெண்கள்'' என்றார் குமார்.

'' இப்போது அரசாங்க ஆபீஸ்கள் இங்கு இருக்கின்றன. இதற்கு ஒட்டிய மாதிரி உள்ள கட்டடம்தான் ராஜஸ்தான் சட்டசபை. பார்க்கலாமா?''

'' அங்கு போனால் வேடிக்கை பார்த்து மாளாது.... மேலே போகலாம்.''

''ஏழு மைல் போக வேண்டும். மகாராஜா மலை மேல் கட்டியிருக்கும் அம்பர் அரண்மனையைப் பார்க்க..... வழியில் ராணிகளின் கல்லறைகளையும் பார்க்கலாம்.''

''கல்லறையில் நமக்கு என்ன வேலை?''

அவை கல்லறை மட்டும் அல்ல; கலை அறைகள் என்பது, பார்த்த போதுதான் தெரிந்தது!

சலவைக் கல்லில் எவ்வளவு நுணுக்கமாகப் பொளிந்துள்ளார்கள்! வேலைப்பாடு என்றால் இதுதான் வேலைப்பாடு. ''இப்படிப்பட்ட அழகிய கல்லறை தமக்குக் கட்டுவார்கள் என்று ஆசைப்பட்டு, அந்தக் காலத்து ராணிகள் சீக்கிரமே இறந்து போக விரும்பினார்களாம்'' என்றார் குமார்.

''உங்களுக்கு யார் சொன்னது?''

''செத்துப் போன ராணி சொன்னார்.... சொல்வதை நம்பாவிட்டால், நான் எதுவும் சொல்லப்போவதில்லே'' என்றார், உர்ரென்று.

அடுத்த ஐந்து மைல் பயணத்தில் அவர் ஒரு தரம்தான் பேசினார். ''அதுதான் 'ஜலமஹால்'. ஏரிக்குள் அரண்மனை கட்டியிருப்பதைப் பாருங்கள்.... வெயில் காலத்தில் அரண்மனை ஜிலுஜிலு என்று இருக்கும்'' என்று! அவர் கோபமும் குளிர்ந்த மாதிரி எனக்குப்பட்டது!

* * *

ஜெய்ப்பூரில் அம்பர் அரண்மனைக்குள் போகாது திரும்பக் கூடாது. ஒப்பற்ற கலை ரசிகனும், சிறந்த கட்டட நிபுணனுமான மன்னன் ஜெய்சிங்கால்தான் இத்தனை சிறந்த அரண்மனையைக் கட்ட முடியும்.

மலையடிவாரத்திலிருந்து அரண்மனைக்குச் செல்ல யானை டாக்சிகள் உள்ளன. நாலு பேர் அம்பாரத்தில் உட்காரலாம். சார்ஜ் ஐம்பது ரூபாய். வேண்டுமானால் பிரம்மாண்டமான ராஜஸ்தான் பிரிமனை முண்டாசையும் கட்டிவிடுகிறார்கள்!

அரண்மனையில் நுழைந்ததும் காளி கோயில். அடாடா! சலவைக் கல்லை இத்தனை மழமழப்பாகப் பொளிய முடியுமா? இவ்வளவு நுணுக்கமாகச் செதுக்க முடியுமா? சாக்குக் கட்டியால் வரைந்தால்கூட மாதக் கணக்கில் பிடிக்குமே. இவர்கள் எப்படிச் சலவைக் கல்லில் 'எம்ப்ராய்டரி' போட்டு இருக்கிறார்கள். காளி மாதாவின் அறையின் வாயிற்புறம் இரண்டு வாழை மரங்கள் குலையுடன் இருக்கின்றன. சலவைக் கல்லில் பச்சை நீரோட்டம் உடைய கல்லில் வாழை மரத்தைப் 'பயிர்' செய்திருக்கிறார்கள். அற்புதம்! அற்புதம்!

* * *

''இதுதான் திவானி ஆம்....என்ன புது மெருகு அழியாமல் இருக்கிறதே என்று பார்க்கிறீர்களா? 'இன்-லே' வேலைப்பாடு எதுவும் சேதம் இல்லாமல் இருப்பதைப் பார்த்து வியக்கிறீர்களா? அதோ, விதானத்தில் கணபதி உருவம், நேற்று வரைந்த 'ஆயில் பெயிண்ட்' போல் பளபளப்புடன் இருக்கிறதைக் கண்டு ஆச்சரியப்படுகிறீர்களா?..... சொல்கிறேன். மன்னன் ஜஹாங்கீர் பொறாமைக்காரன். அவனுக்கு இம்மாதிரி அழகிய கட்டடங்கள் வேறு யார் கட்டினாலும் பொறுக்காது. அவற்றை அழித்துவிடவும் பார்ப்பான். அவனுக்குப் பயந்து மன்னர் இந்த மண்டபம் கட்டி முடிந்ததும் முழுதும் சுண்ணாம்புக் கலவையில் மேலே பூசிவிட்டார். பிறகு பல வருடங்கள் கழித்துத்தான் இவை வெளிப்படுத்தப்பட்டன'' என்று உற்சாகமாகக் கூறுகிறார் குமார்.

அம்பர் அரண்மனையில் ஒரு கட்டடம், ''கண்ணாடி ஹால்''. சின்னச் சின்னக் குமிழ்க் கண்ணாடிகளை அறை முழுதும் கூரை உட்பட பதித்திருக்கிறார்கள். ஒரு மெழுகு வர்த்தியை ஏற்றினால், ஆயிரமாயிரம் நட்சத்திரங்கள் ஜொலிக்கின்றன. ''உலகிலேயே இதற்கு ஒப்பான கண்ணாடிக் கூடம் கிடையாது'' என்றார் குமார். அவர் கூறுவதை

# 50,000 ரூபாய் மதிப்புள்ள பரிசுகள் பெறுங்கள்

## பாரியின் 'ஏற்ற தருணம் எது' போட்டியில்

நொறுங்கள்

பாரியின் 'ஸ்வீட் பாங்க்' தரமான பாரி மிட்டாய்கள் அடங்கியது. கண்ணைக்கவரும் ஆறு அழகிய வண்ணங்களில். 450 கிராம் மிட்டாய்களுக்கு விலை ரூ 12 தான் !



முழு விவரங்களடங்கிய நுழைவுத்தாட்கள் உங்கள் அருகாமையிலுள்ள பாரி விற்பனையாளரிடம் கேட்டு வாங்குங்கள்

முந்துங்கள்! முடிவு தேதி 15 ஆகஸ்டு. 1975 வரை நீடிக்கப்பட்டுள்ளது.



பாரீஸ் கன்பெக்ஷனரி லிமிடெட், சென்னை

SAA/PRS/1769 TAM

---

## அழுத பிள்ளையும் சிரிக்கும் !

குழந்தைகளுக்கு பயோ - ஸால் உடனடியாக அற்புத மாறுதல் உண்டாக்கும் ! இல்லந்தோறும் வளரும் குழந்தைகளுக்கு ஜீரண சக்தியை ஊக்க அவசியமான நிவாரணி. நன்கு சோதிக்கப்பட்டு, பல்லாண்டுகளாக நம்பகமானது என்று புகழ் பெற்ற பயோ - ஸால் எல்லாகுழந்தைகளுக்கும் உதவுகிறது

ஆதாரமான ஆற்றலுக்கு பயோ-ஸால்







**பயோ-ஸால்®**
கிரைப் மிக்சர்



ஜே. & ஜே. டீஷேன்
லேபொரேட்டரீஸ் பிரைவேட் லிமிடெட்
ஹைதராபாத் - இந்தியா

தேவைகளை சொந்தமாகப் பூர்த்தி செய்வதை நாங்கள் வலியுறுத்துவது எஃகுத் தயாரிப்புத் துறையுடன் மட்டும் நிற்கவில்லை.

ஆதித்யபூரில் உள்ள எங்களது மாபெரும் பராமரிப்புத் தொழிற் கூடம் ஒன்றிலேயே நாங்கள் சிக்கலான மிஷின்களையும் துணை பாகங்களையும் சொந்தமாக உருவாக்குவதன் மூலம் இவற்றின் இறக்குமதியைத் தடுத்து ஆண்டுதோறும் தேசத்திற்காகப் பெருமதிப்புள்ள அன்னியச் செலாவணியை மீதப்படுத்துகிறோம்

ஆண்டுகள் பல உருண்டோடினும், நாங்கள் இளமை குன்றாது திறம்படச் செயல்படுவதற்கு இது ஓர் சீரிய எடுத்துக்காட்டாகும்

தேவைகளை சொந்தமாகப் பூர்த்தி செய்யும் துறையில் நாங்கள் வளருகிறோம்.

# எஃகினை யொத்த உறுதியான குறிக்கோள்



TIS. 8730



டாடா ஸ்டீல்

ஒப்புக் கொள்கிறோம்..... இன்னும் பல இடங்களைப் பார்த்தாக வேண்டுமே !

இங்குள்ள எல்லா மண்டபங்களும் சிற்பக் கலையின் மகோந்நதத்தை எடுத்துக் காட்டுகின்றன. ராணிகளின் அந்தப்புரங்கள், அவர்கள் சந்தித்து அளவளாவும் — அல்லது சக்களத்திச் சண்டை போடும் — பொது மண்டபம், சாளரங்கள், பரந்த முற்றங்கள், அகன்ற தூண்களெல்லாம் இந்த நாட்டின் கலைப் பாரம்பரியத்தைப் பறைசாற்றுகின்றன. அரண்மனைகளே இத்தனை அழகு என்றால் அதில் வசித்த அரசிகள் எத்தனை எழிலுடன் விளங்கியிருப்பார்கள் !

* * *

“அரண்மனை மியூசியத்தைப் பார்க்க வேண்டுமா, என்ன.....?''

''ஆமாம்.''

''ஒன்றுமில்லை சார். பழங்காலப் போர்க் கருவிகள், ஓலைச் சுவடிகள், கவசங்கள், புராதன ஓவியங்கள், ராஜ உடைகள் போன்றவை தாம் இருக்கின்றன. உள்ளே போக நாலு ரூபாய் டிக்கெட்.... அதற்கு ரொட்டி—தால்—சப்ஜி வாங்கிச் சாப்பிடலாம்'' என்றார் குமார்.

அவருக்குப் பசி. எனக்கும் பசி. சரி என்று ஒத்துக் கொண்டேன். சாப்பிடும்போது அவர் சொன்னார்: ''மியூசியத்திலே ராஜா மான்சிங்கின் வாள் ஒன்று இருக்கிறது..... பதினொரு பவுண்ட் கனம். எப்படித்தான் தூக்கிப் போரிட்டாரோ, தெரியவில்லை.....அப்புறம் ஒரு விஷயம். ஒரு நாய்க்கு இங்கு நினைவுச் சின்னம் கட்டியிருக்கிறார்கள். ரகசியச் செய்திகளை அந்த நாய் மூலம் அரசருக்கு அனுப்புவார்களாம்.''

''எந்த அரசர்? யார் செய்தி அனுப்புவார்கள் ?''

''சார்....! வெறுமே கேள்வி கேட்டுக் கொண்டிருந்தால், ரொட்டியை எப்போது சாப்பிடுவீர்கள்....? சீக்கிரம் சாப்பிடுங்க. ஜந்தர் மந்தரைப் பார்க்கலாம்'' என்றார்.

* * *

“சூரிய கடிகாரம், சந்திர கடிகாரம், வளர் கலை, தேய்பிறை, துருவ நட்சத்திரத்தின் திசை, பூமியின் சாய்வு, வேகம் இவைகளைக் கண்டுபிடிக்கும் சாதனங்கள்—இப்படிப் பலப் பல ஜந்தர் மந்தரில் உள்ளன.

'' சார்...! இதுதான் 'சூரிய யந்திரம்'. தொண்ணூறு அடி உயரம் உள்ளது. சூரிய கடிகாரத்தில் செகண்ட் வரை சரியான மணியைப் பார்க்கலாம்.... மன்னன் ஜெய்சிங் மாபெரும் கணிதமேதை. ஐந்து ஊர்களில் இவன் ஜந்தர்மந்தர் கட்டியிருக்கிறான். மிகப் பெரிய கணித மேதைகளும் வான சாஸ்திரிகளும்தான் இந்தக் கட்டடங்களின் உபயோகங்களையும் கட்டப்பட்டிருக்கும் திறமையையும் புரிந்து கொள்ள முடியும்.... வாங்க போகலாம்'' என்றார் குமார்.

அவர் கூற்றின் உட்பொருளைப் புரிந்து கொண்டு தலையை ஆட்டினேன்.

''சார்! ராம் நிவாஸ் தோட்டத்தில், ஆல்பர்ட் ஹால் மியூசியம் இருக்கிறது. அதைக் கட்டாயம் பார்க்க வேண்டும்'' என்றார் குமார்.

அதற்கும் தலையை ஆட்டினேன்.

''ஒரு மியூசியம் அமைப்பதற்காகவே இது கட்டப்பட்டது. 1887ல். இதைத் திறக்க இங்கிலாந்திலிருந்து இளவரசர் ஆல்பர்ட் வந்தார்.''

இந்த மியூசியத்தில் வைக்கப்பட்டிருந்தவை அனைத்துமே மற்ற எல்லா மியூசியங்களிலும் உள்ளவைதாம். குறிப்பிடத்தக்கதொன்று உள்ளது. ஓர் எகிப்திய 'மம்மி'யை (பாடம் செய்யப்பட்ட உடல்) இங்கு வைத்திருக்கிறார்கள். பல நூறு வருடங்களுக்கு முன்பு மாண்ட ஒருவரின் உடலைப் பார்க்கும் போது, மெய்சிலிர்ப்பு ஏற்படுகிறது.

* * *

ஜெய்ப்பூரை விட்டுப் புறப்பட்டு ரயில் ஏறுகிறேன். என் நினைவில் எத்தனையோ விஷயங்கள். நிரந்தர இடத்தைப் பெற்றுவிட்டதை உணருகிறேன் — அதில் முக்கியமானது 'ஹெட்கிளார்க்' குமாரின் ஆங்கிலம்! சாகா வரம் பெற்ற மொழி ஆங்கிலம் என்பதில் சந்தேகமில்லை. குமார் செய்யும் கொலைகளுக்குப் பிறகும் அது வாழ்ந்து கொண்டிருக்கிறதே !

**—நமது விசேஷ நிருபர்**

**பேசும் டென்னிஸ் பந்து !**

பேசும் டென்னிஸ் பந்து கண்டுபிடிக்கப்பட்டுள்ளது! ஆம், டென்னிஸ் போட்டிகளில், பந்து 'அவுட்' கோட்டைத் தாண்டி வெளியே விழுந்ததா, உள்ளே விழுந்ததா என்ற பிரச்னை எப்போதும் எழும்; இதைத் தவிர்க்க இந்தப் 'பேசும் பந்து' உதவும்.

இதற்காக 'அவுட்' கோட்டையொட்டி ஒரு விசேஷ 'டேப்' (நாடா) பதிக்கப்படும். இதன் மேல் பந்து பட்டால் ஓர் ஒலி கேட்கும். இந்த ஒலியை நடுவர், பார்வையாளர் அனைவரும் கேட்க முடியும். இதனால், பந்து 'அவுட்' என்றால் எள்ளளவும் சந்தேகமின்றித் தெரிந்து விடும். இதற்காக, பந்தில் நாலு சத விகிதம் ஸ்டெய்ன்லெஸ் ஸ்டீல் கலக்கப்படுகிறது ! இது லண்டனில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது !

வெஸ்டர்ன் டைம்ஸ் — சம்பத்குமார்.



கடைசிப்பக்கம்

## கண்ணதாசன்



# காதல் என்பது ....

**கா**தல் மனித ஆன்மாவைக் கவ்வி இழுக்கிறது. சில நேரங்களில் கரை படிய வைக்கிறது.

நாகரிக உலகில் காதல் என்பது வேடிக்கையாகி விட்டது.

எங்கேயோ, எவளோ ஒருத்தியைச் சந்திக்கின்ற இளைஞன், அவளைப் பற்றிய எந்த விவரத்தையும் கேளாமல் காதலிக்கத் தொடங்குகிறான். அந்தக் காதலின் மூலம் மலை உச்சிக்குப் போனாலும் போகிறான்; படுபாதாளத்தில் விழுந்தாலும் விழுகிறான்.

அந்தச் சந்நிதானத்தில் நிதானம் என்பது இல்லாமற் போய் விட்டது.

பழங்காலப் பண்பாடுகள், சம்பிரதாயங்களில் காதல் ஒரு தெய்விக அம்சமாக இருந்தது.

உடல் வெறி அடங்கிக் கிடந்தது; ஆசை கூட அமைதியாக இருந்தது. பார்வை நாடகமே பல நாட்கள் நடந்தது.

நிலம் நோக்கிச் சிரிக்கின்ற சிரிப்பு, காதலை நீடிக்கச் செய்தது. உணர்வுகள் ஒன்றி நின்றன. உடல் வெறி இல்லாமலேயே இருந்தது. திருமணம் ஒரு புனிதமான சடங்காகக் கருதப்பட்டது. காதல் என்பது கல்யாணம் முடியும்வரை. கல்யாணத்துக்குப் பின்னே அது வெறும் காதல் இல்லை; புனித வழிபாடு. பெண்ணிடம் தாய்மை நிரம்பிக் கிடந்தது.

இன்றோ.....

உடல் இச்சையே காதலாகி விட்டது.

மேலை நாட்டு நாகரிகத்தில் திருமணம் என்பது ஒரு குத்தகைதான்; அதற்கொரு புனிதத் தன்மை உருவாக்கப்படவில்லை.

இந்து தர்மம் இல்லறத்தை வேலிக்குள் அடங்கிய பயிராக வளர்த்தது.

நாலிக்குள் அடங்கிய கோவிலிலே, தர்ம தேவனின் மணியோசை கேட்டது.

முப்பது ஆண்டு காலத்துக்கு முன்புவரை மற்றவர்கள் முன்னிலையில், கணவனும் மனைவியும் பேசிக் கொள்வதுகூட இல்லை.

கை கோத்துக் கொண்டு கடற்கரைக்குப் போகும் காதல் நாகரிகம், வெகு விரைவில் காதலைக் கசப்பாக்கி விடுகிறது.

நாம் மீண்டும் பழங்காலத்துக்குத் திரும்பியாக வேண்டும். தாழிட்ட கதவும், தடைப்பட்ட காதலுமாகத் தலைவனும், தலைவியும் போராடும் இலக்கியச் சுவைக்குத் திரும்பியாக வேண்டும்.

காமம் முன்னால் தள்ள, நாணம் பின்னால் இழுக்கும் நாடகமே காதலின் சுவையூட்ட வல்லது.

கண்டதே காட்சி, கொண்டதே கோலம் என்றால், காதலும் ஒரு வியாபாரப் பொருளாகிவிடும்.

அது சினிமாவுக்குப் பொருந்தலாம். தெய்விக இல்லறத்துக்குப் பொருந்தாது.

ராமனுக்குச் சீதை வாய்த்ததுபோல், முருகனுக்குத் தெய்வானை வாய்த்ததுபோல் தனக்கும் வாய்க்க வேண்டும் என்று விரும்பும் இளைஞனே எதிர்காலத்தை நிம்மதியாக்கிக் கொள்கிறான்.

காதலும், இல்லறமும் எவ்வளவு உயர்ந்த தத்துவங்கள்! ஆனால், நாகரிகம் அதைப் போலியாக்கி விட்டது. வெறும் சதைப் பசியாக்கி விட்டது.

ஆதி மனிதனுக்கு ஏற்பட்ட ஆசைக்கும், இன்று பாதி மனிதர்களுக்கு ஏற்படும் காதலுக்கும் பேதமில்லாமல் போய்விட்டது.

நான் கிராமச் சூழ்நிலையில் வளர்ந்தவன். நமது பண்பாடுகளின் புனிதத் தன்மையில் எனக்குப் பயபக்தி உண்டு.

இல்லற தர்மம் நிம்மதிக்காகவே ஏற்பட்டது.

ராகங்களில் இனிய ராகங்களும் உண்டு; சோக ராகங்களும் உண்டு. அது பாடுகிறவனின் மனோதர்மத்தைப் பொறுத்தது.

மங்கையர்களில் மத்தளங்களும் உண்டு; வீணைகளும் உண்டு. நீங்கள் எதை வாசிக்க விரும்புகிறீர்கள்?

ஒன்று செய்யுங்கள்:

காதலைக் காவியத்துக்கு விட்டுவிடுங்கள்; உங்கள் திருமணத்தைப் பெற்றோரிடம் ஒப்படையுங்கள்; பிறகு உங்கள் எதிர்காலத்தைப் பாருங்கள்.

வாழ்க்கையில் பாலுணர்வும் ஒரு பகுதியே தவிர, அதுவே வாழ்க்கையாகி விடாது.

குடும்பத்தைப் பிரிந்து, தாய் தந்தையரை வெறுத்து ஒருத்தியின் பின்னால் ஓடுவது நிரந்தர நிம்மதியைத் தராது.

கண்ணகியும் கோவலனும் காதல் திருமணம் செய்யவில்லை; ஆனால், மாதவியும் கோவலனும் காதலித்தார்கள்.

காதல் ஒரு கட்டத்தில் வெறுப்பாகி, கட்டிக்கொண்ட மனைவியோடு கணவன் ஐக்கியமானதை, 'சிலப்பதிகாரம்' செப்புகிறது.

இன்னும் அழுத்தமாகச் சொல்லுவதானால், காதலித்துக் கல்யாணம் செய்வதைவிட, கல்யாணம் செய்து காதலிப்பதே மேல்.

பலரது வாழ்க்கையை நான் பார்த்திருக்கிறேன். தவறான தேர்வுகளினால் குடும்ப வாழ்க்கையை நரகமாக்கிக் கொண்டவர்கள் அவர்கள்.

காதலின் புனிதத்துவம் கெட்டுப் போனதால் ஏற்பட்ட விளைவு இது.

'தற்கால உலகம் காதலுக்கு லாயக்கற்றது' என்பது என்னுடைய கருத்து.

கண்ணில் தெரிவதெல்லாம் நல்ல காட்சியாகி விடாது. இளம் பருவத்து மனத்துக்கு எடை போடத் தெரியாது. தாயும் தகப்பனுமே எடை போடும் யந்திரங்கள்.

இளைஞர்களே,

உங்கள் விருப்பம் போல் கிருதாவை நீளமாக வைத்துக் கொள்ளுங்கள்; குடாமுடியை வளர்த்துக் கொள்ளுங்கள்; ரவிக்கைத் துணியில் சட்டை தைத்துக் கொள்ளுங்கள்; ஆனால் இயற்கையான அழகுக்கும் 'ஃபோம்' ரப்பருக்கும் வித்தியாசம் தெரிந்து கொள்ளுங்கள்.

நீங்கள் காதலித்தே கல்யாணம் செய்வது என்று முடிவு கட்டுவதானால், கம்பனின் ராமகாதையைப் படித்துவிட்டு, ஒரு சீதையைக் காதலியுங்கள்.

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

படுக்கை வேளையில் பல் துலக்க நீங்கள்
மறந்திடும் ஒவ்வொரு நேரமும்...



# உலகமெல்லாம்
# பரவிப் பெருகியுள்ள
# நோயால் பீடிக்கப்படும்
# அபாயத்துக்கு உள்ளாகிறீர்கள்!

படுக்கை வேளையில் நீங்கள் பல் துலக்கத் தவறும்போது, பற்களைச் சிதைக்கும் கிருமிகள், இரவு நேரத்தில் உங்கள் வாயில் தங்கும் உணவுத் துகள்கள் மூலம் வளர்ச்சி அடைகின்றன. இதனால் நூற்றுக்கு 95 பேரைப் பாதித்து, வலிதரும் சொத்தையாக மாறி, அவதி தரும் பற்சிதைவு நோய் பீடிக்கிறது.

பினகா ஃப்ளோரைட் பற்சிதைவுக்கு எதிராக நீடித்த பாதுகாப்பளிக்கிறது

பற்சிதைவை 50 சதவிகிதம் வரை ஃப்ளோரைட் குறைக்கிறது என விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன. ஆகவே தவறாமல் பினகா ஃப்ளோரைடினால், நாள்தோறும் காலையிலும், மீண்டும் படுக்கை வேளையிலும் பல் துலக்குங்கள். இதன் தனிப்பட்ட,நீடித்து நிற்கும் ஆற்றல், இரவு பூராவும் உங்கள் வாயைச் சுத்தமாக வைத்திருக்கிறது. பற்களைச் சிதைக்கும் கிருமிகளின் வளர்ச்சியையும் வலிதரும் சொத்தையையும் தடுக்கிறது.




**பல்லுக்கு உறுதி,**
**பற்சிதைவுக்கு எதிரி—**

# பினகா ஃப்ளோரைட்

U–BF/28/75 Tam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon